வர்ந்தராப் பாயலிடை யேந்தலை நிகர்த்தநுதலின் - இட்ட
சிந் தூரவெழில் கவர்ந்துநின் கொண்கனா யிழைந்துமேற்
போந்துலாவித், தெருள்கான் றெவற்றினுந் தோய்வற்று நின்
றவச் சிற்பரம் பொருளையொத்துச் - சேணுடர் கொண்டாட
வாடச் செழுங்கருணை தேக்கிநிறை சோமேசனார், அருள்கா
ன்ற கண்களி பயப்பமணி நித்திலத் தம்மானை யாடியருளே-
ஆரண முழக்குகமலாகர புரத்தலைவி யம்மானை யாடியருளே.

வேறு.

மூத்த மிழைத்தன வும்பவ ளத்திரண் மொய்த்தன வுங்
கலைகண் - முற்று நிறைந்த பசுங்கிர ணச்செழு முழுமதி யா
மெனவும், எத்திசை யுங்கதிர் கான்றிருள் சீத்தெழு மென்றூ
ழாமெனவும் - எண்ணி யுணற்கெழு மூன்று ளராவு மிருஞ்
சிறை நேமியுநின், னுத்தி முலைக்கு மியற்கு மிடைந்தய லோ
டவும் வெம்பசியால் - உயங்கு சகோர மயங்கி யுடன்றிரி வுற்
று வருந்தவுமென், னத்த னுளத்தி னடிக்கு மடப்பிடி யாடுக
வம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக
வம்மனையே. (எ)

வடங்கெழு கொங்கை நிகர்ப்ப வளர்ந்த வடாது பொரு
ப்பினைநின் - மகிணர் கரத்தினி லின்னும் வளைத்திடு மாறொ
ரு சூழ்ச்சிநினைந், துடங்கழி மூன்று புரங்களை மீண்டு முலா
வ வெழுப்பிவரம் - உதவி வெளிக்கண் விடுத்தல் கடுத்திட
வொள்ளொளி முத்தினுமோர், முடங்க லுருதொளிர் நீலமய
த்தினு மொய்த்த பசும்பொனினும் - முற்ற வமைத்து விடுத்
தரு ளம்மனை மூன்றும்விண் மீதுலவ, அடங்கிய வன்ப ருள
ங்குடி கொண்டவ ளாடுக வம்மனையே - அரந்தை துரந்து
குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (அ)

உய்ய வரந்தரு நித்தன் முகத்தி லுயங்க முனந்தகையு
ம் - ஒண்கர மின்னு மொறுத்த லுருத்தற வாடி நயப்பமெனு,
வெய்ய நெருப்பெழு செங்கதி ருங்குளிர் வீசு பனிக்கதிரும்-
மேவிய கங்கையி னேடுறு கேண்மை விளைத்துவிண் ணேகு
தல்போற், செய்ய மணிப்பவ ளத்தி னிழைத்த செழுந்திர ள
ம்மனையுந் - தெள்ளிய முத்தி னிழைத்த கதிர்க்குவை சிந்தி
ய வம்மனையும், ஐய நுசுப்பொசி யத்தளி ரங்கையி னுடுக வ,
ம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வ
ம்மனையே. (க)

கதிருமிழ் நீல மணித்திரண் மொய்த்த கருஞ்சுட ரம்ம
னைநின் - கட்படை யாலடி யார்மல மோடல் கடுப்ப வெழு
ந்துலவ, முதிரொளி துற்ற செழும்பவ ளத்திரண் முற்றிய வ
ம்மனையம் - மும்மலம் வென்ற திறற்பிர தாப முளைத்தெழ
லொத்தெழவெண், மதிநிகர் முத்த நிரைத்து வனைந்தவம்மா
னையதன்பிறகே - வயங்கிய கீர்த்தி திரண்டெழு கின்றது மா
ன் வெழுந்துலவ, அதிர்வளை யங்கையி னுலமு தாம்பிகை யா
டுக வம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளா
டுக வம்மனையே. (க0)

அம்மானைப்பருவமுடிந்தது.

---

## நீராடற்பருவம்.

தேங்கிய செழுங்கலைத் திங்களுக் கருள்செய்த செல்வர்
முடி மீதுதானும் - திளைத்தாடு முரிமையாற் றிளைத்தாடு வோ
ர்க்கெலாந் தீப்பிணிப் பவந்தெறுதலால், ஓங்கிய கலித்திரைா
ச் கங்கையொன் றோடம்மை யொத்ததா மென்றதனேடும் -
உறவாடல் வேட்டெழுந் தாலென்ன விண்ணத் துயர்ந்துடுக்
கூட்டமலமேற்- றுங்கிய கிளைக்குலங் கான்றமணி யைத்த

னது சாதியென வோகைகூரத் - தண்கதிர்க் கடவுளொடு செங்கதிரை யண்டத் தடஞ்சுவர்ப் பிடரினேற்றி, வீங்கிய வொலிக்கூட்ட மீன்றுவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே- வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (க)

இருகவு ளுடைந்தூற்று பூங்கடாங் கமழ்முகத் தெறுழ வலிக் குழூஉக்களிறெலாம் - எழிலிக் குழாத்திற் பெயர்ந்து ழி தருஞ்சிகரி யிடமாதி நான்குமாற்றத், தருவள னடங்கத் தழீஇக்கொண்டு பின்னவை தளர்ந்துகலி கூராவகை - சால வெதி ரொன்றுக் கனந்தமாப் பெருவளன் றண்டா தளித்து வரிசூழ், அருகில னிடத்தொருவர் கிளையளவை யாற்றிடினு மருளினிலை பெறுவாழ்க்கையோ - டழியாத திருவுமெதி ராங்கவாக் குதவுநின் னடியவரை யொத்துமாக்கள், வெருவிய யலோடத் தழங்கிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (உ)

வளைத்தமுப் புரிசைத் தலத்தினின் றயில்கொண்ட வாளிக் குழாமெழுதல்போல் - வயங்கிய பசும்பொற் றிரட்கு வட் டிணையும்வல வாளரித் திரளையுநெடுந், துளைத்தகை முகக்கடாக் குஞ்சரத் திணையுஞ் சுழிக்குமச் சுழிமூன்றினுந் - துண்ணென வெழுந்தநெட் டெல்வாளை தெய்வத் துறைப்புனற் கங்கைநதியிற், றிளைத்ததிற நோக்குவார்க் கிப்புனல் படிந்தாடு செய்தவப் பயனையிந்தத் - திண்பூத பரிணும தேகத்தி லுதவுமா தீர்த்தமிது வெனவியப்பு, விளைத்துவிண் ணுடும் பழிச்சவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே.

திரைத்தொலி பரப்பியலை வீசும் பெருங்கடற் றீம்பயம் பருகியார்த்துச் - செல்லின மெழுந்துநெடு வான்படர்த் து

ந்தனது தீர்த்தம் படிந்தாடுநர், புரைத்தொகை விளக்குமல மாயைகன் . மக்குழாம் பொள்ளென விரிந்தோடலும் - பு ரையக் கருங்குழற் காட்டுமலர் கூரும் பொலஞ்சிறைத் தும்பிமுழுதும், இரைத்துமணி வானத் தெழுந்தோட நீராடு மேந்திளங் கொங்கைமடவார் - ஏறிட்ட மணியணிகள் சிந் திய கரைக்கணின் னிணையடி வருந்தாவகை, விரைத்துணர் நிரம்பப் பரப்பிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெ றிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடி யருளே. (௪)

**கொ**ழுந்தாம மாடவது சுற்றுங் குழற்கற்றை கூட்டுவி ட் டாடவதனிற் - குடிகொண்ட மாதர்ச் சுருப்பின முடே னெனக் குரல்விளைத் தாடவதுசூழ், செழுந்தூ துகுங்கஞ்ச வெள்ளனந் திரைபூடு சேர்ந்தாட வதனருகுநின் - றிருமே னி கண்டின மெனப்பிணி முகக்குலஞ் சிறைவிரித் தாடவ துபோல், எழுந்தாடு தெய்வப் பிணைக்குழாங் கண்டுகண் டி ன்பநீ ராடவவர்தோள் - இணங்கும் பெரும்புலவர் கைகொ ட்டி யாடவெள் ளிரம்புனற் கங்கைபுவிமேல், விழுந்தாங் கொழுங்குகொண் டாடிவரு பாலிநதி வெள்ளநீ ராடியரு ளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள் ளநீ ராடியருளே. (௫)

வேறு.

ஏந்து பிறைவெண் மருப்புரற்கா லெழில்கூர் மலைவா ரணத்திரள்கள் - எய்திப் புரவை கலக்குமலை யேய்ப்பத் து ளைந்து விளையாடி, நீந்தி யணைந்து கரையேறி நிறையுங் களி ப்பு மீக்கொண்டு - நிலாவெண் டரளக் குவைபெயர்த்து நீ ள்வாரிதியின் கரைக்கணலை, மாந்து முகிலா வியைச்சொ ரிந்தான் மானச் சிதறும் பரப்பினிடை - வான்மீ னமிவட்

பலமதியம் வதிந்தா ணிகர்ப்பச் சங்கினங்கள், போந்து துயி லும் பாலிநதிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குளந் தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (௬)

வதியுஞ் செழுந்தேங் கமலமலர் மடவா ரமிழ்ந்தே புன லகத்து - மறைந்தால் யாங்க ணிணைப்பிடிக்க வல்லே மென வஞ் சினங்கூறச், சுழியும் புனனீ யவ்வாறு துண்ணென் றொளிப்ப மற்றவர்தாந் - துருவிக் காணு தெங்கொழுநர் சோதிப் பிரான்று டலையென்ன, மொழியு முறுப்போ ரிரண் டையுமே முன்னிக் காணார் யாமிவளை - முழுதுங் காணே மெனநாணி முடிசாய்த் தொதுங்கி நிற்பவருள், பொழியும் பசிய முகில்பாலிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் கு ளந்தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (௭)

திரையுந் தனது நறும்புனலிற் றிளைத்து முழுகு மடவா ர்தஞ் - செழுந்தேந் தொடையற் சுரும்பினங்கள் சேட்சென் றகலும் படிவிலக்கி, உரையுந் தொழிலு முள்ளமுந்தன் னு ழைச்சேர்த் தழுந்து வோர்மலநோய் - ஒருவுந் தொழிலைத் தெரித்திதழி யறழுப் பொன்னும் வெண்டலைபோல், நுரையு ஞ் சடைபோற் றுவர்க்கொடியு நுணுகு மதிபோற் கரிக்கோ டும் - நுடங்க நடித்து வெளுத்துமறை நுவலற் கரிய பரம் பொருளைப், புரையுஞ் செல்வப் பெரும்பாலிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குளந்தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (௮)

வேறு.

முகமல ரிணையொளி யுகுமதி யாமென முண்டக நொந் தயர - முன்கையி லேற்றிய சங்கொடு சங்க முழங்கிக் கரை புரள, மகர விருங்குழை யெதிரிய கெண்டை மலங்கு கய ற்குலம்வார் - வாளை கலங்கி யெழுந்து குதிப்ப வயங்கு சு

ணங்கிலமென், றகரெரு புற்புத முலையி னுடைந்திற வறல்குழல் போற்றகரம் - அணிந்தில மெனநின தடியிற் றன்கவினழியத் திருமருவிப், புகழ்நிறை யுங்கம லாகரி பாலிப் புதுநீ ராடுகவே - பூரண ஞான புராதனி பாலிப் புதுநீ ராடுகவே. (௯)

விற்புரு வங்குழை யக்கரு நீல விழித்துணை செங்குவளை - வெல்லநின் மேனி தழைப்ப முகேமொன வீங்கிய நீர்குடையா, நிற்புகழ் தெய்வ மடந்தையர் மீதினி னீள்சிவி றித்துளையான் - நிரைத்த குறுந்துளி தம்முட லெங்கு நிரத்தலும் வானவர்தங், கற்புணை தோள்கள் புதைத்தன ராடக் கடவுள் சடாமகுடக் - கங்கை யவன்றலை யைந்தொடு மாடக் காசினி கொண்டாடப், பொற்பு மிகுங்கம லாகரி பாலிப் புதுநீ ராடுகவே - பூரண ஞான புராதனி பாலிப் புதுநீ ராடுகவே.

நீராடற்பருவமுடிந்தது.

---

## ௰ ஊசற்பருவம்.

ஒழுகொளி பரப்பிக் கதிர்த்தெழும் பரிதியை யொழுக்கித் திரட்டி யதுபோல் - உரகமுமிழ் செம்மணித் தூணிறுவி யதனும்ப ரொளிகிலாக் கான்றகலைகள், முழுதுநிறை திங்களை யுருட்டிநீட் டியதேய்ப்ப முதிர்வயிர விட்டமிட்டம் - முழுமதியி னின்றிழியு மமிழ்ததா ரைகளென்ன முத்தணி வடங்கடேக்கிப், பழுதகலு நவமணிப் பலகையிடை மூட்டியப் பலகைமேன் மதியமிழ்துணப் - பச்சிளங் கிள்ளையொன் றேறிநுலென்னப் பரிந்திருந் தருளிமுலைமேற், புழுகொழுக வுயிர்களுக் கருளொழுகு மமுதம்மை பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௧)

செயலையந் தாருவை யுதைந்தாடு தொறுமச் செழுந்த ருப் பூக்கள் சொரியுஞ் - செயலுதைக் காற்றுது தனை நீங்க வெண்ணிறந் தேவைத் தணந்துவிளையாட், டியலைமேல் கொண்டநின் மீதலர்ப் பூம்பகழி யிளையாது சொரிவ தெனவு ம் - இதுகண் டதற்குநேர் விழிச்சுரும் பீந்தருளி யிளநிலா ந கைமுகிழ்ப்ப, அயலுறாஉங் கொடிமுல்லை யூழ்த்தலர் சொரிந் திட லருந்துணைமை பூண்டுதானும் - அலர்வாளி பெய்திடுந திறனெனவு மேர்காட்ட வைம்படை பொறுத்த பச்சைப், புயலொடு பிறந்தருட் கடலொடு வளர்ந்தமின் பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன் னூச லாடியருளே. (உ)

நிலம்பொலி யுயிர்ப்பயிர் மலக்கொடுந் தழல்வெம்மை நீத்துமெய்ஞ் ஞானமலரா - நின்மலா னந்தச் செழுங்கனி கனிந்தோங்க நிறையருட் சூல்கொண்டுபொற், கலம்பொ லியு முருவெலாம் பச்சென்று தோற்றிக் கருங்குழற் கற்றை நாப்பட் - கதிர்த்தசிறு கீற்றிளன் மின்னியொளி கூர்ந்துதற் கார்முகங் கவினவாங்கிச், சிலம்பொலிசெய் கிங்கிணிப் ப ருமத்தி னுற்பெருந் தீங்குர லெடுத்திடையுருத் - திருவருட் டாரைபொழி செய்கைக்கு வாய்ப்பவான் சேர்ந்துலாய் நி ற்றலுறழப், புலம்பொலியு மடியார்கள் சிந்தைகுடி கொண் டவள் பொன்னூச லாடி யருளே - பூரண மதிக்கருள் புரிந் தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௩)

மனக்குல மிடைந்துபின் காட்டவிசை கொண்டாடும் வ ன்மையா னினதுருவெலாம் - மணித்திர ளிளைத்தெனச் சி றுவெயர் பொடித்தலும் வழிகின்று பணிகேட்டுநின், னனக் கவி னடைத்திறங் கற்கவரும் வெள்யானை யஞ்சிச் செவிக் காலெறிந் - தந்தரக் கங்கையை மடுத்துத் துளித்துவெய ரா

றருமத் திவலைபரவ, நினக்கடிமை பூண்டுமுன் போற்றுமி
மையோர்முத னெடுந்தருப் புலவிறுதியின் - நிரத்தலா ல
னைத்துநினை மயமெனுஞ் செஞ்சொல்லை நிலையுறுத் திடுவ
தேய்ப்பப், புனக்கிளி நிகாந்தமென நீங்கிளவி யமுதம்மை
பொன்னூச லாடி யருளே - பூரண மதிககருள் புரிநதகம
லாகரீ பொன்னூச லாடி யருளே. (௪)

திங்களொளி காட்டுமுக மீதலவு நாட்டச் செழுங்கய
லுதைநதூககலாற் - செமபொனி னிழைத்தமக ரக்குழைக
ளுஞ்செவிச் செங்கனக வூசலாடப், பங்கய விருக்கைமட மா
தரது நோககியிரு பாலுமிரு வேமாட்டவும், - பாயுங் கயற
குல மசைக்குமவ் வூசலிற பாயநிலகிவ் வூசலெனநீள், அங்
கையின் வலித்துநனி யாட்டுதொறு நினவா யரும்புநகை நி
லவெழிலினுக் - கொங்கவர் முகததிங்கள் சாயப் புராணம
றை யாகம மளநதறிவரும், புங்கவன் மருங்குகுடி கொண
டவமு தாம்பிகை பொன்னூச லாடியருளே - பூரண மதிக்க
ருள் புரிநதகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௫)

திண்ணிய பொலஞ்சிகரி வாங்கிய பிரான்சென்னி தெரி
கலா மறையோதிமஞ் - செப்புபழி மொழிமாறு மாறுனக்
கூதியாய்ச் சேர்நதுநின் றுள்சுமந்து, தணணிய நிறுதுகண்
ணருள்கிடைத் துன்னுழிச் சார்ந்திறைவ னூடநீரத் - தாள்ப
ணியு மேல்வைமுடி கண்டுகொண் டுயர்கீர்த்தி தாங்குவா னெ
ண்ணிவரலும், கண்ணியவவ் வஞ்சனை யறிநததனை யலமரக்
காண்டுமென வுன்னியேறிக் - ககனத்து முன்பின்ன தாகக்
கடாவுதல் கடுப்பவெண டாளமொய்த்துப், புணணிய மலர்
ந்தனைய வொண்பலகை யேறிநீ பொன்னூச லாடியருளே-பூ
ரண மதிக்கருள் புரிநதகம லாகரீ பொன்னூச லாடியரு

அரவமுமிழ் செம்மணித் திரள்சுற் றிழைத்திடை யலங் கொளிய நித்திலத்தால் - அமைத்தத னடுச்செழுஞ் செம்ப ட் டலங்கரித் தவிர்பலகை மீதிருத்தல், இரவகல வெங்கதி ருகும்பரிதி மண்டல மிளம்பனிக் கதிர்மண்டலம்-எரிக்கடவு ண் மண்டலங் கீழ்தொட்டு முறைமூன்று மேய்ந்தபூந் தவி சிலடியார், பரவநீ நின்றநிலை யொப்பவா னந்தமெய்ப் பண் ணவன் விழிச்சுடர்கண்ணின் - பாலனுரு காட்சியப் பரிசறிந் தெம்மையும் பருஉமணித் தவிசெனக்கொள், புரவுபூண் டரு ளென்று வேண்டுதல் கடுப்பவுயர் பொன்னூசலாடியருளே- பூரண மதிக்கருள் புரிநதகம லாகரீ பொன்னூச லாடி யருளே. (எ)

சுத்தமு மசுத்தமு மெனப்படுங் கொடுமாயை தூணாக விருளாணவந் - தொடுத்தநெடு விட்டமாக் கருமப் பெரும் பகுதி தூக்கிய வடங்களாக, வைத்தமா யேயமே பலகை யா முடிவிலா வான்புவன கோடிமுறறும் - மகிழ்ந்தாடு வெ ளியாக வாருயிர்க் குழுவிகளை மரணம் பிறப்பென்னுநோய், மொய்த்தமணி யூசல்வைத் தாட்டிக் கடைத்தலை முடங்கா தெடுத்தணைத்து - முதுக்குறை வளித்துமேற் பரமுத்தி வீடு ய்த்து மூவாத வானந்தமாம், புத்தமிழ் தருத்திமெயத் தாயா ய் வளர்ப்பவள் பொன்னூச லாடியருளே - பூரண மதிக்க ருள் புரிநதகம லாகரீ பொன்னூச லாடியருளே. (அ)

நார்தகப் பொருபடை விதிர்த்தனைய விமையாத நாட் டத் தரம்பைமாரும் - நளினக் கரங்கூப்பி யெதிர்நிற்கு மு கில்வண்ண நாயகன் முதற்றேவரும், வேய்ந்தசெம் பொற் பெரும் பூண்களி னிழைத்தபல வேறுகுல மணிகடொறுமவ்- விரிகதிர்ப் பேதத்தி னுக்கேற்ப நின்னூசன் மின்னிழல் பரப்

தோறும் வயங்குபரி பாகபேத - மார்க்கத்தி னுக்கிசைய ம ன்னிநீ விளையாடும் வாய்மையைக் காட்டவளிவீழ், பூந்தகர வார்கருங் கூந்தலமு தாம்பிகை பொன்னூச லாடியருளே- பூரண மதிக்கருள் புரிந்தகமலாகரீ பொன்னூச லாடிய ருளே. (௯)

அண்டப் பரப்பெங்கு மண்டிப் படர்ந்தபே ரானந்த வெள்ளம்வாழ - அருட்சரியை கிரியைசிவ யோகமொடு ஞானமெனு மகிமைசிவ தருமம்வாழக், கண்டவர்க் கினியநஞ் சோமேசர் வாழநின் கட்கடைக் கருணைவாழக் - காசினி யொருங்குசிவ பத்திகுரு பத்திசங் கமபத்தி செய்துவாழ, வெண்டிருப் பூதியுய ருக்கமணி வாழமெய் விளக்குமஞ் செழுத்துவாழ - வேதநெறி சைவநெறி வாழக் குளந்தை நகர் மேன்மேற் செழித்துவாழப், புண்டர நுதற்றொண்டர் தங்குழாம் வாழநீ பொன்னூச லாடியருளே - பூரண மதிக் கருள் புரிந்தகமலாகரீ பொன்னூச லாடியருளே. (௧0)

ஊசற்பருவமுடிந்தது.

---

ஆகப்பருவம் பத்துக்குத்திருவிருத்தம் - ௧0௩.

குளத்தூர்ப் பிள்ளைத்தமிழ் முடிந்தது.

மெய்கண்டதேவன் றிருவடிவாழ்க.

---

சிவஞானசுவாமிகள் திருநக்ஷத்திரம்.

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம் - பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
சிவமேய்ந்த நீங்கு தினம்.

# பிரகடனபத்திரம்.

## இதுவரையிற்பதிப்பிக்கப்பட்டபுத்தகங்கள்.

| | ரூ | அணா |
|---|---|---|
| குளத்தூர்ப்பிள்ளைத்தமிழ். | 0 | ௩ |
| கலைசைச்செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ். | 0 | ௨ |
| கலைசைச்சிலேடைவெண்பா. | 0 | ௧ |

## இனிப்பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்.

காஞ்சிப் புராணம்.
விநாயக புராணம்.
திருத்தணிகைப் புராணம்.
திருவானைக்காப் புராணம்.
பேரூர்ப் புராணம்.
பூவாளூர்ப் புராணம்.
முதுமொழி வெண்பா.
இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.
கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
கம்ப ரந்தாதியுரை.
முல்லையந்தாதியுரை.
கச்சி யானந்த ருத்திரேசர்வண்டுவிடுதூது.
கச்சி யானந்த ருத்திரேசர்பதிற்றுப்பத்தந்தாதி.
திருத்தணிகை யாற்றுப்படை.
திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி.
பஞ்சாக்கர வந்தாதி.
துறைசைக் கோவை.
கலைசைக் கோவை.
திருப்பெருந்துறைப் புராணம்.
திருவாவடுதுறைப் புராணம்

மகாமகோபாத்யாய
டாக்டர். உ. வே. சாமிநாதையர்
நூல் நிலையம்,
சென்னை - 600090.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

குளத்தூர்

# அமுதாம்பிகை

## பிள்ளைத்தமிழ்.

---

### விநாயகக்கடவுள்வணக்கம்.

மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்
ண்மை வடிவென்று மஃதின் மையோர் - மருங்கு
ண்மை யாலாண்மை வடிவென்று மீதுகீழ் மாறிய
க்காட் சியால்,—அணிகொண்ட வுயர்திணைய
தன்றுமஃ றிணையென்றும் யார்க்குங் கிளக்க வரி
ம் - ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரண மஞ்
சித் துத்து திப்பாம்,—பணிகொண்ட துத்திப்
டத்திற் கிளைத்தவிர் பருஉமணி விளக்கி னொரு
ற் - பாயிருட் படலஞ் செறிந்தொளிர்வ தென்ன
ப் பாம்பணை கிடக்கு மொருவன்,—திணிகொண்ட
லற் புயக்குவடு விம்மத் திளைக்குமகள் வாணி பிரி
த் - தென்குளந் தாபுரி யிருந்தவமு தாம்பிகை
ழுந்தமிழ்க் கவிதழையவே.

---

*குளந்தாபுரி குளந்தை கமலாகரம் என்பன குளத்தூரென் னும் பொருளன.

## காப்புப்பருவம்.

### திருமால்.

சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச் சிறை செய்த வாறறிந்தாற் - செயிர்த்துநந் திருமனைன்மருகி தமையெலாஞ் சிறைசெய்யு மென்றும்,—ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையைசுறைக் கிறுதிநாள் பயவா மையே - எண்ணிமுதியைப் பரிதியாற் றடைசெய்த வேந்தற் பிரக்க,—பேர்கொண்ட மேனிலச் சோபானமேறு பேதைமார் முகநோக்கி நம் - பேராசுளவரு மதிபோலு மிதுவெனப் பெரிதுமேக்கவர்கடங், — கார்கொண்ட பின்னற் கரும்பார்கண்டுளங் கவலாது களிகூர்ந் துதண் - கலைமதிவைகுபொழில் சூழ்குளத் தூர்வரும் கடவுட் பிட்டி தனையே.

---

காப்புப்பருவம் - பாட்டுடைத்தலைவரைத் திருமால்முதலியோராற் காவல்புரிவிக்கும் பருவம்.

(க) காந்தனென்றது சூரியனை. கஞ்சம்சிறைசெய்தல் - நான்குமிமுதலிய மூவரும் தம்முளொடுங்கக் குவிதல். பரிதியாற்றடைசெய்தது பாரதம் பதினான்காம்போரில். சோபானம் - படி. களிகூர்தலாவது—இச்சந்திரன் பின்றொடரும் பாந்தளாற் கவரப்படுமென அச்சமிமுந்து பொருமகிம்வெ

## சிவபெருமான்.

வேறு.

அளிசு ரந்தமரர் பசிகெ டும்படியி னமிழ்து தந்த கதிர் கொள்சடைக் காட்டிடை - அழல்வி டஞ்சொரியு மரவி னம்பசிய வறுகு வெண்டலைகள் பல்குறச் சூட்டியும், அரிய யன்பரச வவரி டும்பைதெறு மலர் செ ழுங்கமலம் வெல்கரத் தோட்டிடை - அணைவுறும்பொருள்கள் கருக வெம்புசுட ரவிரு மங்கியினை வெய்தெனக் காட்டியும், — இளிவ ரும்பொன்மலை வளையு முன்பவுண ரெயிலொ ருங்கவிய வெள்ளுபொற் றோட்கிடை - இடுவ னங்களினி லுயிர்ம டிந்தவர்தமிகழு மென்பினையு மைதெனப் பூட்டியும், எழுதருஞ்சொன்மறை முடிவு மன்பர்தம திதய மும்பரவ நல்குமெய்த் தாட்டுணை - எமது புன்றலையு முறநயந்துமரு ளியப ரம்பரனை யுள்ளுறச் சேர்த்துதும்,— தளிர்து வன்றியிருள் படநி ழன்றுகுளிர் தழுவி வண்டுதுதை செய்துணர்ப் பூத்திரள் - ததைவு கொண்டு நறு மணம ளைந்துமகி தலம சும்புபட வெள்ளமட் டூற்றெழு, தரவ ளர்ந்துமுகி லகடு டைந்தழகு தபவுதைந்துதிசை யெல்லையைக் காத்திடு - தறுக ணெண்கரியை முடுகு றுங்கருவி தருமி தென்றெவரும் விள்ளமொய்த் தார்த்தவிர்,—ஒளியு மிழுந்துலவு பரிதி

---

(உ) இது, இறைவா விழைவும் வெறுப்புமின்றி எவற்றையும் ஒப்பநாடும் அருளுடைமை உணர்த்தியபடி. தோள்கள் என்னுதலாவது—தம்வலிகாட்டுமுன் வலியிழந்து வெந்தமைநோக்கி இகழ்தல். இடுவனம் - சுடுவனம். முடுகுறுங்கருவி - ஓட்டுங்கோல்.

மண்டலமு முடுப மண்டலமு நில்லெனத் தாழ்த்தி
விண் - ணுலகு சென்றுசுரர் தருவொ டும்பழகி யுறவு
கொண்டுமகிழ் பல்வளக் காக்களின், உறைப சுங்கி
ளிகள் சுருதி சந்தையுட னுரைசெய் கின்றதனை மல்
குபுத் தேட்குலம் - ஒளியி ருந்துகவர் பதிகு ளந்தை
வரு முரைவி ளங்கமுத வல்லியைக் காக்கவே. (௨)

### விநாயகக்கடவுள்.

வே று.

ஒற்றைச் சுதைத்தனுக் கோட்டியெங் கணுமின்னி
யோவாது மும்மாரி பெய் - தொண்பூ தலத்துலவு
செங்கொண்டல் போலுமென் றுன்னியச் சுற்றியா
யிதற்,—கெற்றைக்கு மூர்த்தியா யுற்றிடக் கடவமென்
றிருண்மேக மருகு வந்தாங்-கிலகுகரு மூடிகத் தாதிப்
பிரான்சரண மேத்தெடுப் பாமெம் பிரான்,—கற்
றைப் பிறைக்கொழுந் தொளிர்சடில வட்டமேற் கண
மணிப் படம்வி ரித்துக்-கண்வளரு மகிநீர்மை தலையு
வா ஞான்றுசெங் கதிர்க்கிர கணங்க டுக்கும்,—பெற்
றித் திறந்தெரிந் தானந்த வெள்ளப் பெருங்கடல்
குடைந்தா டுறாஉம்-பெண்ணணங் கரசியைத் தென்
குளத் தூரெம் பிராட்டியைக் காக்க வென்றே. (௩)

---

(௨) உடுபம் - விண்மீன்; இருபெயரொட்டு.

(௩) அகி - பாம்பு. தலையுவா - அமாவாசை; இது இரவியு மதியும் அண்மையில் வசிக்குநாளென்னும் பொருளது. அமா - அண்மை. வாசை - வசிப்பது. ஈண்டுச் சடிலவட்டம் இராகுக்கு ஒப்பு. விநாயகரைச் செம்மேகமென்றதற்கேற்பக் கோட்டினை இந்திரதனுவாகவும், காந்தியை மின்னலாகவும், மதநீரை மும்மாரியாகவும், இதில் உருவகிப்ப காண்க.

(9045)

### முருகக்கடவுள்.

மாங்குயி றரங்குசுவை யூற்றெழ மிழற்றுமொழி
வானமீன் மாத ரறுவர்-மருமத் தெழுந்தபொன் வள்
ளத்தி னமிழ்துண்டு மருவிவாழ் தற்கு ரியதன்,—றே
ங்கமல வீட்டினைத் தனதெனக் கொண்டுவாழ் திசை
முகனை வெய்து யிர்த்துச் - சிரநான்கு மோதிப் புடை
த்துப் பிணித்தவன் சிறையிட்ட தேவை நினைவாம்,—
ஓங்கலொரு வில்லா வளைத்தெயி னைத்தனலை யூட்
டியருள் சோமேச னார்-ஒருமூ விழிக்கிடைந் தஞ்சிச்
சரண்புகுந் தோலமிடு புண்ட ரீகம்,—பூங்குவளை
மாரனுக் கருள்செய்து முகமெனப் போர்கொண்ட
வாள்வி ழியெனப் - பொய்த்தநுண் ணிடையெனத்
தாங்குங் குளந்தா புரிக்குளமு தைக்காக் கவே. (௪)

### பிரமதேவர்.

தவளக் குரூஉமணி குயிற்றியொளிர் தபனியத் தன
துமனை வாயி னிறுவுங் - தண்ணிய விதழ்க்கத வடை
த்துத் திறக்குந் தனித்தொழிலை வண்டு முரலும்,—
பவளச் சரோருகத் தன்னைதன் ஞேடுற் பவித்தபுல
வற்கு மந்தப்-பண்ணவற் கெதிரான புலவற்கு மாகப்
பணித்தவிறை வன்பு ரக்க,—கவளக் கடாங்கவிழ்

---

(௪) முருகக்கடவுள் கமலத்தைத் தமது வீடெனக்கொண்ட
து சரவணப்பொய்கையில்.

சூரியசோமாக்கினிகளென்னும் மூவிழிக்கும் முறையே இடை
ந்துவந்த தாமரை குவளை மன்மதனை முகமும் கண்ணும் இடை
யுமாகக் கொண்டருளினரென்பது.

கவுட்டுணை நெடுங்கைக் களிற்றுப் பிடர்த்தலை வரும்-கண்ணு யிரங்கொண்ட விண்ணுடர் கோமகன் கற்பகச் சோலை விடபங்,—துவளக் குடங்கைத் தலத்தினிற் கோட்டித் துணைத்தமுலை மாதர் மலர்கொய் - தூமணித் தெற்றிக ணெருங்கிய குளந்தைவரு சுந்தரப் பெண்ணை முதைமே. (ரு)

தேவேந்திரன். வேறு.

அதிருந் தரங்கக் குண்டகழி யளறு படப்புக் குழக்கிமுழக்-கசனிக் கிகலிக் கலித்துமதத் தடுக்க லெடுத்துத் தெறித்துவெகுண்,—டெதிருங் குழூஉக்கொள் படைகவல விடறுங் கறைத்தாட் பரூஉத்தடக்கை-இறைக்குங் கடவெண் களிற்றியானை யெருத்தத் திவரும் புருகூதன்,— முதிருஞ் சுவைத்தெள் ளமிழ்தொழுகு முழுவெண் ணிறத்து மதிக்குழவி-முருகு விரியுங் கடவுணதி முழுகித் திளைக்குஞ் சடைப்பெருமான்,—கதிரும் விழிக ளிருள்சீப்பக் கங்குற் பொழுதி னெருங்கிருந்துங் - கலவிக் குறிப்பிற் குளாணுங் கமலா கரியைப் புரக்கவே. (௬)

இலக்குமி.

கடிப்போ தலர்த்திக் கருஞ்சுரும்பர் களித்துத் துயில்கூர் கற்பகப்பூங் - கானம் பயிலுங் காமர்நகர் கவலை துரந்தின் னமிழ்தளித்துப்,—படிப்பாற் பயிலு மகளிடத்துற் பவித்துப் புவன மூன்றனையும் - பரிக்குந் திகிரிப் படைப்பாணிப் பகவன் மருமத் துறை

(ரு) விடபம் - கிளை.

(௬) அசனி - இடி. கமலாகரி - குளத்தூரிலுறைபவள்.

மடந்தை,—விடப்பாம் பிரவி வெம்மைமிசை மேவா
வண்ணங் குடைகவிப்ப - விரிக்குங் கதிர்ச்செம் பவ
ளநிற வேணி யணையாப் புனிற்றுமதி, — முடிப்பா
லரசு வீற்றிருக்கு முதல்வ னிடப்பா லிருந்துலக -
முழுது முயிர்த்த குளங்கைநயர் மொய்பூங் குழலைப்
புரக்கவே. (எ)

## சரஸ்வதி.

வேறு.

அளிக்கா தரவுற்றுச் சுவைத்துகள் - அளித்தார்
வனசத்துப் பொகுட்டயன்,—உளத்தா மரைநச்சத்
திளைத்தவன் - உரைப்பா லருள்பெற்றுத் தரித்த
வள்,—களத்தா லமடக்கிச் சுரர்க்கிடர் - களைத்தே
யவொறுத்துக் கடைக்கணரி,—குளத்தார் நயனத்தற்
கிடத்தமர் - குளத்தா ரமுதத்தைப் புரக்கவே. (அ)

## துர்க்கை அல்லது காளி.

வேறு.

துளிக்கும் பசுந்தே னுவட்டெடுத்துச் சொரியுஞ்
செழுந்தா மரைப்பொகுட்டுத் - தோன்றற் பெருமா
ன் முதற்கடவுட் டொகுதிப் பைங்கூழ் களைக்கருக்
கிக்,—களிக்கு மகிடா சுரக்களையைக் களைந்து சிரமே
ற் பாசடையிற் - கமல மெனத்தாள் பதித்திவர்ந்த
கன்னி யெனுந்தெய் வதங்காக்க,—பளிக்கு மணிமா
டங்கடொறும் பதிந்த தமது சாயலினைப்-பாரா வின
மென் றிளஞ்சேய்கள் பரிந்து பரிந்து வருகவென,—

---

(அ) கடைக்கணரி - கடைக்கணித்து.

குளத்தா நயனத்தா-நெற்றியி னிலங்கிய கண்ணையுடையவா.

விளிக்கும் குளந்தைத் திருநகரின் வெளிய மதியந் தவழுமுடி - விளங்கும் கதிர்ச்செம் பவளமலை மீது படர்பைங் கொடி யினையே. (கூ)

சந்தமாதர்.

வேறு.

இலகொளி யுமிழ்தரு சிறையோ திமத்தவள் - எழிலுறு தவளவல் விடையூர் திறத்தவள், எறும்வலி மயில்கட விளவ்வே றிரிப்பவள் - இருசிறை யொருகலு ழனையேறி நிற்பவள்,—உலகதிர் தரவரு மரியேறுகைப்பவள் - உமிழ்கட மழைபொழி யயிரா வதத்தவள், உழிதரு குழிவிழி யுடல்பேய் நடத்துநள் - உவமொழு மகளிர்த மொளிர்தாள் பழிச்சுதும்,—அலகைக ணடமிடு மழலார் களத்தினில் - அமரர்க டபுமுடல் கழிபா னிறக்கலன், அரவொடு திணிவரை நிகர்தோ ளிடைப்பொலி - அணியென வணிதரு பெருமா னிடத்தமர்,—நிலவிரி நகையவ ளிருமூவகைப்படு - நெறிகளு நிறுவிய வொருமா தவக்கொடி, நிலமிசை யுயரிய கமலா கரத்துறை - நிருமலி மலைமக ளனையே புரக்கவே. (கo)

முப்பத்து முக்கோடிதேவர்.

வேறு.

சிறகரளி மொய்த்திதழ் கொழுதுமது வைப்பசி சிதைய மடுத்துக் களித்தாடு தேமலர் - செருகுமள

(கo) சத்தமாதர்கள் — அபிராமி மாகேசுவரி கௌமாரி நாராயணி வராகி இந்திராணி காளி; இவர்களை இச்செய்யுளில் முறையேகொள்க. இருமூவகைப்படுநெறி - உட்சமயம் ஆறு.

கக்கன மதர்நெடுவி ழிக்கடல் சிறிது குடித்துக் கறுத்
தார மேவிய, திணிமுலைம லைச்சொரி திதலைநிதி
யத்திரள் செழுவிய பொற்புக் கடற்பாய வாழொழில்-
செறிதரும டித்திரை யிடையறலொ ழுக்கிய திறமைம
நிகர்த்தொத் தொழுக்காழு ரோமமுங்,—குறைவற
வளித்தருள் குவலயம டக்கொடி குளிர்கெட நச்சிக்
கறைப்போர்வை யாலுடல்-பொழுவியதெ னத்திசை
முழுவதும டக்கிய குமரி யிருட்டைப் படச்சாடு
மாதவர், குலவுகிர ணச்சுவை யுணவினையு ணத்தனி
குறுகிய பொற்சக் கரச்சேவல் போலெளிர் - குரும
ணிகு யிற்றிய புயமலைகு ழைக்கெதிர் குயமுடி யைச்
சற் றெடுத்தேறு பார்வையும்,—வெறிகமழு முற்பல
நறுமலர்ம ரைப்பினில் விழைத லத்தைப் படித்
தேக நீள்செவி-வியனிலமி றுத்தமை யெணிமறமி
குத்தவை வெருவி விழச்செற் றகைத்தோடி நீடிய,
விரிமலர்த னக்கொரு மறைவிடமெ னப்படும் விழி

(௧௪) கூந்தலென்னு மேகம் விழிக்கடலைக்குடித்துக் கறுத்து முலைமலையிற்சொரிந்த தேமலென்னு நிதித்திரள், அழகென்னுங் கடலிற்பாய, அக்கடலிற்செறிந்த மடிப்பென்னுந் திரை இடையிலே கருமணலை யொதுக்கிய தோற்றம்போன்று (உந்திமேல்) ஒழுங்குபட்டுள்ள உரோமமும்; பூதேவி கரும்போர்வையால் உடலைப் பொதிந்தாற்போலக் கவிந்த இருளையழிக்கும் சூரியர்க ளுடையகிரணத்தை உண்ணக்குறுகிய சக்கரவாகப்புட்போலக் குழைக்கெதிரே முடியை யுயர்த்தி நோக்கும் குயப்பார்வையும்; தம்பகையாகிய குவளைமலர்கள் தம்சிறப்பைக்கூறிச் செல்லு தற் பொருட்டுச் செவியை யடைந்தமையைச் சிந்தித்துக் கோ பரிக்கக் கண்ணையும் காக்கிச்சென்ற. அவற்றிற்கு மறைவிட

யொனெனப்புக்கு விற்காதி ஞேடமர்-வினையிலிக ரப் துழை சடைவனமு றற்கெழ விரைவில் விளைத்துக் குதித்தாடு பார்வையும்,—இறைமையும ளப்பறு மழ கொளிர நிற்பவ ளிமைய மலைக்கட் கொடிப்போல மேவிய-இனியமா - மைக்குயின் மரகதம யிற்பெடை யிரையு மிருக்குக குளத்தூரி ஞடியென், னிருமை வினை முற்றற வெனையுமடி மைகொளு மெழிலமிழ் தச்சத்தி வைப்பான காவலர் - எரிகதிரு ருத்திரர் விறல்வசும ருத்துவ ரொனுமிவர் முப்பத்து முக்கோடி தேவரோ. (கக)

காப்புப் பருவமுற்றிற்று.

---

மெனப்படும் நிலைமை என்னெனச் சாதேநாடு அமரத்தொழிலை விளைத்துக் குதித்தாடுகின்ற கட்பார்வையும்; தலைமையும்; அள விடற்கரிய சிறப்புவிளங்க நிற்பவளென்க் கூட்டுக.

கறை - கருமை. குமரி - அழிவின்மை. சேவல் - ஆண். வினை யிலி - சிவபெருமான். உழைபயந்து சடைவனமுறற்கெழ அடா விளைத்தாடு டார்வை யென இயையும்.

முப்பத்துமுக்கோடியராவரா - மருத்துவரிருவா வசுக்களெ ண்மா உருத்திராபதினொருவா ஆதித்தாபன்னிருவா என்னும் இவர்கள்கூற்றில் தனித்தனிக் கோடியராய்த்தோன்றி அவ்வத் தலைவரால் காக்கப்படுந்தேவாகள்.

## செங்கீரைப்பருவம்.

பொருவரிய வண்டப் பரப்பைமுழு தாளும்புரா
தனர் முகத்து விழியாப் - போந்துலவு நங்கொழுநர்
தம்மைத் தடுத்திடர் புரிந்தகைக் கமல நமையும்,—
பருவர லுறுத்துமென் மஞ்சிமென் குமுதமும் பங்க
யமு மொன்றை யொன்று - பாதுகாப் பத்துயிலு
மென்றர மடந்தையர் பரிந்துகொண் டாடுசீர்த்தி,—
இருகைகமல ரும்புவி பதித்தொரு முழந்தா ளிருத்தி
யொரு தாண்மே னிமிர்த் - திந்த்ரதிரு விற்கிடை
தொடுத்தவெண் டரளநிரை யேய்ப்பநுதல் வேர்பொ
டிப்பத்,—திருமுக நிமிர்த்தொரு குழந்தையமு தாம்
பிகை செங்கீரை யாடி யருளே - சிற்சபையி னெற்
றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யரு
ளே. (க)

பொங்கரி பரந்தசிறை வண்டினம் விருந்துணப்
பூங்கமல நான்முகை யெலாம்-போதாக வெழுபரித்
தேர்கடாய்க் கடன்முகடு பூப்பவரு பரிதிப் பிரான்,—

---

செங்கீரைப்பருவம் - செவ்விய மழலைச்சொற்களைப் பேசும் பருவம். கீர் - சொல். இப்பருவத்தின்செயல், ஒருகாலைமடக்கி ஒருகாலைநீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்த்து முகமசைய ஆடுதல்.

(க) கொழுநரென்றது சூரிய சந்திரர்களை. இடர்புரிந்தமை மூடினமை. ஒன்றையொன்று பாதுகாப்பத்துயிலுதல் - பகலில் தாமரை மலர்ந்து குமுதம் குவிதலும், இரவில் தாமரை குவிந்

சங்கின முயிர்த்தவெண் டரளவட மணியுமித் தாம
ரை முகிழ்த்துணையும் யாண் - றண்டாத மெல்லிதழ்
முறுக்குடைத் தல்லாது தணவலென் றருகு போந்
து,—வெங்கதிர்க் கற்றைகள் பரப்பியுல வுதலேய்ப்ப
மின்னுமக ரக்குழை கதிர்-வீங்கிள முலைத்தலை யுமிழ்
ந்துதண் புயமீது விளையாடி நிற்ப வதனத்,—திங்கண்
மிசை யாடக் குளந்தையமு தாம்பிகை செங்கீரை
யாடி யருளே - சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை
யாட் டுமயில் செங்கீரை யாடி யருளே. (உ)

கார்பூத்த மறுவுண்ட வெண்கதிர்க் கலைமதி கவி
ன்றநின் மலவதனங்-காண்டொறு மறுவற்ற மதியீ
தெனவுட் கவன்றமுன் னிற்க வஞ்சிப்,—பார்பூத்த
தென்குளத் தூர்ப்பொங்கர் காவணம் பரியமதி ஞா
ழையூடு-பைமொய நுழைந்தொளிந் தோடநிற் பணி
யவரு பங்கயச் செலவி முதலோர், — ஏர்பூத்த வங்
கையர விந்தமலர் கூம்பவவ ரிணைவிழிக் குவளை யெல்
லாம்-இரும்புனற் றேத்துளி பொடித்துமிழ்ந் தலர
வருமொனு மமிழ்த தாரை கான்று,—சீர்பூத்த முகம
தியமாடவமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே -
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டு மயில்
செங்கீரை யாடி யருளே. (ங)

---

(உ) தணவல் - தணவென். பரிதிப்பிரான் போந்து கதிர்க் கற்றைகள் பரப்பி உலவுதலேய்ப்பக் குழைகள் கதிருமிழ்ந்து விளையாடி நிற்ப என இயையும்.

(ங) ஞாழை - சாளரம். பொடித்தல் - அரும்பல்.

மணிதுற்ற தவிசெனப் பருமணிப் பருமம் வயங்குமடி மீதி ருத்தி-மதிக்கடவு டன்மனை யெனக்குலாய்த் தன்னமிழ்தம் வாக்குவ தெனத்தீம் பயம்,—பணிலத்தின் வாய்க்குமுத மூட்டிமற் றிதுமாசு பரியாது சாலா தெனப்-பாரிழைத் தொருபொட்டு நுதன்மதிக் கிட்டுப் பசுங்கழையின் மஞ்ஞை நின்றும், —கணிபெற்ற புயமே லணைத்திரு மதித்தேவ ரளவளாய்க் குழீஇய தேய்ப்ப - அழகிய முகத்துமுத் தாடியெழின் மேனைசி ராட்டமகிழ் கூர்ந்து கொடியேம்,—திணிவைத்த நெஞ்சங் கரைக்குமமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே - சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே. (ச)

முக்கனி செறித்தநறு நீர்ப்பந்தர் முல்லைவெண் முகையனைய மூர லறுகான் - மூரிய விளம்பொங்கர் தேசுறு மலர்ப்பொய்கை முதலான வறம்யாவையும்,— தொக்கமறை யாகம விதிப்படி யியற்றுநாட் டோலாத கருணை கூர்ந்து-துண்ணென வெழுந்தருடிருச்சோம நாதனார் தூமேனி குழைவித் தவை,— இக்கரமு மிக்கரமு மித்தனமு மித்தனமு மெய்ந்நுயிர்த் தோழியர் களாய் - எத்துமட மாதரார் தம்மைத் தெளித்திடுவ தேய்ப்பமுக மதிய மசையத்,— திக்கெட்டு மேத்துங் குளந்தையமு தாம்பிகை செங்கீரை யாடி யருளே - சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் செங்கீரை யாடி யருளே. (ரு)

(ச) பருமம் - பதினன்குகோவையமைய்ச்செய்து இடைக்

வேறு.

பொங்கெழி லின்முக மாடுதொ றுங்கமழ் போதரி நீள்விழிகள் - பொற்செவி யிற்பல காலுமெ திர்ந்து புகுந்து மறிந்துலவச்,—செங்கதிர் நீள்குழை தம்மொடு தாமெதிர் சென்று மணிக்கலொடுஞ் - செயிரறு பொன்னி னரும்பு பிதிர்ந்து தெறித்திட மோதுதிறந்,—துங்கிளை சார்ந்திடை யாவகை சாற்றமொய்த்தாம வயிற்படையாற் - றண்குரு தித்துளி வீழ்தர வீரர்க டம்மொடு தாமெதிரா,—அங்கை கலந்தமராடுத லாமென வாடுக செங்கீரை - அளந்தறி யாத குளந்தை நிலாவமு தாடுக செங்கீரை. (௯)

பலவுயி ருங்களி கூர்கரு ணைக்கடல் பம்பி வளைந்தெனப் - பாலொளி கான்ற நறும்புனல் சூழ்ந்து பரந்தொளிர் சும்பையிடை,—விலவுமிழ் மின்னுருவச்சுடர் வேணியின் ஞானை வடந்தழுவி-வீங்கிள வெம்முலை மார்புற வங்கையின் மேதகு தோள்குழையப்,—புல்லி யணைப்பது போல்வயி ரங்கள் பொதிந்தவிர் தொட்டிலினும் - பொன்னணி பாவையொடாடி யளைந்துப் பொழுது கழித்தருளும்,—அல்லிமலர்க்குழல் வல்லி பராபரை யாடுக செங்கீரை-அளந்தறி யாத குளந்தை நிலாவமு தாடுக செங்கீரை. ()

(௯) மொய் - மொய்த்த. தாமம் - மாலை. விழிகளுலவக் குழைகள் மோதுந்திறம், துங்கிளை இடையாவகைசாற்ற வீரர்கள் அமராடுதல் போலும் என்க. உறுப்பெனப்படும் ஒற்றுமை நோக்கி விழிகள் கிளையென்றுபசரிக்கப்பட்டன

குலத்தில் வளர்த்திடு மன்னையர் செந்துகில் கூர்
மடி மீதிமையக்-குன்றி னரக்கலர் வாழ்க்கை யெனக்
களி கொண்டு குலாவியவர்,—கலைப்பொலி முகமதி
யுங்குழன் முகிலுங் கண்டென வாய்க்குமுதங்-கதிர்த்
த நகைத்தள வலர வரும்பக் கைக்கம லங்குவியா,—
முலைக்கம லச்செழு முகையொடு நட்பு முயங்கிட
வாடலுறும்-மூரி வளத்துத ரத்திரு வாலெழின்
மொய்த்து மிகத்தழைய,—அலக்க ணறச்சுவை யார
மிழ் துண்பவ ளாடுக செங்கீரை-அளந்தறி யாத கு
ளந்தை நிலாவமு தாடுக செங்கீரை. (அ)

வேறு.

வான மெழுங்கரு மேக வினங்கள் வறந்தி ரம்
போய்வன்-மால்வரை பொங்கணு மோடிட வென்றி
மிர் வண்டே தும்போது,—நான முயங்கிய வாச நறுங்
குழ ளந்தா வந்தீப-நாவி லெழுந்தொளிர் தூம வொ
ழுங்கென நன்றூர் மென்சாயன்,—மேனி நிறந்தரு
மேனை யணங்கு விழைந்தார் வங்கூர-மீறி வளர்ந்
தழ கான குளந்தை விளங்கா நின்றாறு,—தேனிறை
கொன்றையி னணிட நின்றவள் செங்கோ செங்கீரை-
தேவர் தொழுங்கலி யாண சௌந்தரி செங்கோ
செங்கீரை. (கூ)

---

(அ) அரக்கலர் - செந்தாமரை. மடிமீதுகுலாவி, அலர அரும்ப முயங்கிட தழைய அமிழ்துண்பவளெனக் கூட்டுக.

(கூ) மேனி நந்தாத் தீபத்தை நிகர்க்கக், குழல் தீபத்தூம ஒழுங்கென அர்க்க மேனை என இயையும்.

கோல நெடும்பனி மாலிமை யம்பயில் கொம்பே
செம்பாத - கோகன தந்தொழு வாருள நின்ற கொ
ழுந்தே பைந்தேனே,—ஞால மளந்தவ னொடு மரும்
பெற னங்காய் வெங்கோப - நாம விடஞ்செறி காமரு
கண்டர்த நண்பே தண்போதோ,—டேல மளைந்தி
ருள் கூரு நறுங்குழ லெந்தா யெம்பாசம் - ஈறு படும்
படி ஞான மணங்கம ழின்பே யன்பாளர்,—சீல மிகு
ங்கம லாகரம் வந்தவள் செங்கோ செங்கீரை - தேவர்
தொழுங்கலி யாண சௌந்தரி செங்கோ செங்கீரை.

செங்கீரைப்பருவ முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

மதுரங் கொழிக்குங் கொழுந்தேறன் மடுத்துச்
சுரும்ப ரடைகிடக்கு-மலர்ப்பூந் தடத்தைக் காண்ட
லுஞ்செம் மணிகால குடுமிப் பணியுலகம்,—இதுவு
மரவந் தனக்கிடமா யிருக்குங் கொல்லா மென்றழுக்
கா - றெய்தித் தன்கீழ்ப் படத்தாழ்த்து மியல்பை
யறிந்தா லெனக்கரைக்கட், — பொதுளி யுறவு கொ
ண்டநறும் பொதும்பர் நாக ருலகெனுமொப் - புமை
யாற் புலவோர் பதிதாழ்த்திப் பொற்ற துதிர்க்குந்
திருக்குளந்தைப்,—பதியின் மகிழ நறியசுவைப் பா

---

தாலப்பருவம் - தாலாட்டுப் பருவம். தாலாட்டு - ஓவசை யாக நாவசைத்துப் பாடும்பாட்டு. தாலு - நா.

(சு) ஒப்புமை என்றது பாதாள லோகத்திற்கும் தேவலோகத்திற்கும் நாகலோகமென்னும் பொ[illegible]

கே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரள நகைப் பாவாய் தாலோ தாலேலோ. (க)

இருள்கால் சீத்துச் சோதிவெயி லெறிக்குஞ் செக்கர் மணித்தொகையின் - இழைக்கும் பசும்பொற் றலத்துயர்த்த விருங்கே தனத்தின் மிசையுயிர்கட்,— கருள்கால் கலைவெண் முழுமதிய மமரும் பரிசு தழனுப்பண் - அமைத்த தூணத் தருந்தவஞ்செய் யறவோர் கடுக்கு மேனிலத்துச்,—சுருள்கான் மலர்ப்பூங் கூந்தலிளந் தோகை யனையார்க் கெதிர்நடிக் குஞ் - சுரமா மகளிர் விழித்தொழிற்குத் தோற்றுச் சமழ்க்குந் திருக்குளந்தைப்,—பருகா வமிழ்தே பெருங்கருணைப் பரையே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ.()

மணங்கேழ் வனச மூற்றெடுத்து மதுவார் பொகுட்டுச் சுறுச்சுமந்து - வயிறு வருந்திக் கருவுயிர்க்க வயின்பார்த் துழலும் பெடைஞெண்டைக்,—கணங்கே ழயின்முட் டாட்படுத்துக் கவைத்தா ளிடையற் றலையூடு - கருவண் டினங்கள் புடைசூழக் கலந்து முரலத் துவக்குண்டு, — சுணங்கேர் முலைப்பெண்

(உ) சுரமகளிர் அபிநயங்கட்கிணங்க இமைத்துச்சுழலும் கண்களை எய்தாமையின் விழித்தொழிற்குத் தோற்று நாணினு ரென்க.

(ங) தாமரைமலர் பொகுட்டிலே சுறுவைச்சுமந்து, முள்ளையுடையதண்டால் ஞெண்டைச்சிக்குவித்து, அதன் கவைத்தாளால் இடையறுபட்டு, புடையில் வண்டினங்கள் முரலப் பிணிப்

ணணங்குகினைச் சுமந்து மகளிர் தாலெடுப்பத் - துயலுமணித்தொட் டிலைக்காட்டுந் தொடுநீர் வாவித் திருக்குளந்தைப், — பணங்கே ழரவப் பேரல்குற் பரையே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ. (௩)

கந்தங் கமழு நறுங்களபக் கலவை யளைந்த முலைக் குவடாங் - கரடக் களிற்றின் மருப்பினிடைக் கவின்ற வுரோமப் புழைக்கரத்தால்,—நொந்தங் கலமந் திறங்கொடிபோ னுணுகித் துவளுஞ் சிற்றிடையார்-றுவலுங் கிளவிக் கிடைந்தகுயி னுவலா தடங்கி யவ் விசையின்,—சந்தம் பலநா ளகம்பயிலத் தழுவிச் சில நாள் வாய்விண்டு - சாற்றி யொப்பு நோக்கியொவ் வாத் தவற்றப் பின்பும் வாயடைக்கும்,—பைந்தண் பொழில்சூழ் குளந்தைநகர்ப் பரையே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ. (௪)

சுரும்பர் துளைக்க வுவட்டெடுத்துச் சொரியு மிரதச் செழுங்கரும்பைச் - சுவைத்துக் கதலிக் குலைசா

---

புண்டு, மணித்தொட்டிலைக்காட்டுந் திருக்குளந்தை என முடிக்க. வனசமலரைத் தொட்டிலாகவும் சுரு(ளை?) அம்பிகையாகவும் நெருண்டை ஆட்டுபவராகவும் வண்டுகளைத் தாலெடுப்பவராகவும் உருவகித்தபடி.

(௪) நுவலா தடங்கல் கார்காலத்தும், வாய்விண்டு சாற்றல் வேனிற்காலத்தும் என்க.

டித் தூங்குந் தெங்கம் பழஞ்சிதறி, — விரிந்த பசு நெட் டிலைக்கமுகின் மேவிக் ககனத் தருவையதன் — மீது படர்பூங் கொடிவழிபோய் மிதித்துக் குனித்து விளையாடி, —வரிந்த கழையி னெடுங்கயிற்று வழி போய் நடிக்கும் பொருநர்திற - மானக் குரக்குக் குலங்குதிக்கும் வளஞ்சேர் பொதும்பர் சூழ்குளத் தூர், — பரிந்து தொழுவோர் மனத்துறநும் பாகே தாலோ தாலேலோ - பணில முயிர்த்த தரளநகைப் பாவாய் தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

சுலவித் தரளப் பவளக் குவைகள் சுருட்டிக் கரை புரளுந் - துவலைத் திரைமைக் கடனின் றெழுமிரு சுடர்கண்மு னச்சுடர்தஞ்,—சிலையிற் கவினக் குயிலுமுருப்புன றீயைப் புடைபெருகச் - சிந்திப் பனிகூர் வ்ழுதிற் புனலிற் சேர்ந்தற மாற்றுநரை,—உலறத் தெறுவெப் புடைவே னிற்பொழு தொள்ளெரி வாய்த்தவநோன் - புழப்ப வரைப்பொரு நொச்சி மதிற்குல மோங்கு குளந்தையெனுந்,—தலனிற் பொலிவு பெறப்பயி லுங்கொடி தாலோ தாலேலோ - தகரக் குழலா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (சா)

(ரு) பொருநர் - மற்றொருவர்போல வேடங்கொள்ளுங் கூத்தர். பொருநுதல் - ஒத்தல். விளையாடிக் குரக்குக்குலம் குதிக்கும் எனக்கூட்டுக.

(சா) உருக்கள், புனலையும் தீயையுஞ்சிந்தி, புனலில் அறமாற்றுநரையும், எரிவாய்த் தவநோன்புழப்பவரையும், பொரும் என முடிக்க. நொச்சிமதில் - இருபெயரொட்டு.

கொங்கு விரிந்த நறுங்க மலங்கள் கொழிக்கு மதுப்புனலாக் - குவிதர வூழ்த்துதிர் தண்ணிய தாது குவிக்கு மெருக்குவையாய்,—பங்க நிரந்த வயற்கண் விளைந்து பழுத்தெழு நெற்குலை போய்ப் - பசும்புர வித்திரள் பூட்டிய தேரிற் பரிதிக் கடவுள்புடைப்,— பொங்கொளி வெண்கவ ரித்தொகை வீசுவ போல வொசிந்தசையும் - பொற்பு மிகுங்கம லாகர மேவிய பூரணி மெய்யடியார்,—தங்கள் பணிக்கென வெம் மை யளித்தவ டாலோ தாலேலோ - தகரக் குழலா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (எ)

பவளக் கொடிபடர் வேலை முகட்டிற் பாயொளி கான்றெழுசெம் - பரிதி நிகர்ப்பச் செம்மணி மாலை பரப்பிய மைக்குழன்மேற்,—றிவளக் கதிர்விடு கொ ண்டை திருத்திச் செஞ்சுடர் வாண்மகரத்-திருவணி யக்கடன் மகர மெனத்தனி செருகிப் பகைஞரு ளங்,—துவளச் சிலைபடு கணையென நுதலிற் சுட்டி தரித்தருகிற் - சுடர்பிர தாப மெனப்பொட் டெழு தித் துன்னிய கீர்த்தியெனத், தவளப் பணிமூக் கிட் டொளிர் பாவாய் தாலோ தாலேலோ - தகரக் குழ லா யமுதப் பிடியே தாலோ தாலேலோ. (அ)

---

(எ) ஊழ்த்தல் - மலர்தல்.

(அ) பிரதாபத்தைச் செந்நிறத்த தாகவும், கீர்த்தியை வெண் ணிறத்ததாகவும், உருவகிப்பது இயல்பாகலின் நுதற்பொட்டி னையும் மூக்கின்முத்தணியையும் அவைபோன்றுருவகித்தார்.

வே று.

பரந்த வெண்புணரி மீதோன் வேதா மாதேவர் - பணிந்து தொண்டுசெய வேலே சேலே போலா டும்,—கருங்க ணுந்துமளி யீவாய் பாவாய் தாவாது - கறங்கு வண்டளக மானே தேனே யேனோர்தம்,— புரங்க டந்தநகை வாயார் தூயார் சேயார்பாற் - புண ர்ந்தி டும்பசிய தோகாய் காவாய் நீகாவென், — றிர ங்கு மன்பரக வாழ்வே தாலோ தாலேலோ-இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ. (கூ)

மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவளை யேயாய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவளை யேயாய் தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய் தாலோ தாலேலோ.

(இ-ள்.) மலங்கு அடங்கும் அருள் ஊராய்-மலங்குதலொழிந்த திருவருளென்னும் எல்லையை யுடையவளே ; மலங்கள் தங்கும் மருள் ஊராய் - மலங்கள் நிலைபெற்ற விபரீதநிலையில் (அன்பரை) உறையச்செய்யாதவளே ; கலம் கலந்தவளை ஏயாய் - இழிமை செறிந்த ...ைப் பொருந்தாதவளே ; அம் தவளை கலங் கல் ஏயாய் - அழகியதவமுடையாரைக் கலக்கம் எய்தாவகை செய்பவளே ; புலம் கடந்த பரம் நாடாய் - சத்தாதிவிடயங் களைக்கடந்த மேலான முத்திநாட்டை யுடையவளே ; புலங்கள் தந்து அபரம் நாடாய் - (எவர்க்கும்) உணர்வையருளி (அவ்வரு

ஞுதற்செயலில்) பிற்படுதலை நாடாதவளே; இலம் குளந்தை வரு தாளாய்—இல்லமாகக்கொண்டு குளந்தாமொன்னும் திருப் பதியில் எழுந்தருளிய முயற்சியையுடையவளே; இலங்கு உளம் தைவரு தாளாய் - (ஞானத்தால்) விளக்கமுற்ற உள்ளத்திலே தவழ்தலைச்செய்யும் திருவடிகளை யுடையவளே; என்றவாறு. மலங்கு - முதனிலைந் தொழிற்பெயர். அடங்குதல் - ஒழிதற்பொ ருட்டு. ஊராய் ஏயாய் என்பவற்றுள் பிந்தியவிரண்டும், பிறவி னைப் பொருளில் வந்தன. மருளுராய் என்பதற்கு, விபரீத உண ர்ச்சிக்கண் தவழ்தலைச்செய்யாதவளே எனவும், கலங்கலந்த வரையேயாய் என்பதற்கு, அணிகள்செறிந்த மலைபோலும் தன ங்களையுடைய அன்னையே! அல்லது, மேகலை செறிந்த திருவரை யை யுடையாய் எனவும், கொள்ளலும் ஒன்று. அபரம்-பின் தாள் - முயற்சி. தாலோ என்பது தாலாட்டைக் கவனிப்பா யாக எனப்பொருள்படும் தாலேலோ என்பதன் மரூஉ.

தாலப்பருவ முற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

உருப்பொலி மணிப்புன லுடுக்கைப் புவிக்கொடி யுரத்திற் குலாவு மாக்கள் - உருத்தொன்றை யாற்றி னெதிர் பத்தாற்று வோமெனு முனைக்கிலக் கியமாக வொண்,—குருப்பொலி விரற்செறி செறித்துப்பொ லந் தொடிகள் கொழுவித் தனைப் பரிவினுற் - கொ

---

சப்பாணிப்பருவம் - இருகரங்களையும் ஒருங்குசேர்த்துக் கொட்டும் பருவம்.

(க) விரற்செறி - விரலிற்செறிப்பது; அது, மோதிரம்.

ண்டாடு நின்றிருத் தாதைகிளை யொன்றைக் குழைத் துப் பணித்த விறைவன்,—திருப்பொலி கடுக்கைத ழை தோட்குவடு பத்தையுஞ் செழுந்தழும் பாக்கு ழைத்துத் - திறல்கொண்ட நறுமலர்க் காந்தளங் கை த்தலஞ் சேந்தழ கெறிப்ப விமையோர், — தருப் பொலி மலர்த்தொடைக் கூந்தலமு தாம்பிகை சப் பாணி கொட்டி யருளே,—தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை சப்பாணி கொட்டி யருளே.()

உள்ளொளி ததும்பிமேற் பொங்கிப் புறத்தினு முவட்டெடுத் துப்ப ரந்தாங் - கொழுகொளிய வெ ண்ணீறு மெய்ம்முழுது மட்டித் துயர்ந்தவடி யார் கள் குழுமி, — வெள்ளொளியி னுனுஞ் சிவத்துதி முழக்கானும் வேங்கைமக வுக்க ளித்த-விதிவச நினை ந்தின்னும் வேண்டுவார்க் கருளாமை வேண்டுது மெ னுங்க ருத்தாற்,—றெள்ளுதீம் பாற்கடல் வளைந்தெ னச் சூழ்போந்து சேர்ந்தனர் நெருங்கு பொதியிற் - றெய்வத் திருக்கேள்வ ராட்டினுக் கேற்குந் திருத் தாள மென்ன மலரைத்,—தள்ளியெழில் பூத்தநின் செங்கைத் தலங்கொண்டொர் சப்பாணி கொட்டி ய ருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம் மை சப்பாணி கொட்டி யருளே. (உ)

---

(க) தாதை - மலையரையன். கிளை ஒன்று என்றது-மேருவை.

(உ) உள்ளொளி - உண்ணிலவியஞானம். வேங்கைமகவு - உபமன்னியமுனிவர். பொதியில் - சபை. அடியார்கள் குழுமி வெள்ளொளியினுனும் முழக்கானும் பாற்கடல் வளைந்தெனச் சூழ்போந்து நெருங்குபொதியில் எனஇயையும்.

ஐவகைச் சுத்தியு மமைத்துவான் கம்பைநதி யருகன்பு பூப்ப மலரால் - அஞ்சலி நிறைத்துமே ணேக்கிமுக மதியினெதி ரல்கிய தெனக்கு விந்து,—மெய்வகைத் துவாதசாந் தத்தலத் தானந்த வெள்ளப் பெருஞ்சோதியை - விரிமலர்த் தவிசாகி யேற்றுமுன் போலென்ன மீண்டுங் குவிந் திழிந்தாங்,—குய்வகைச் சிவலிங்க நாப்பணு வாகித்தவ் வும்பனய னச்சுட ரொதிர் - உறக்குவிந் தலர்விரைவு மானமுத் திரைகொடுந் துலவாது பூசை முற்றுஞ்,—சைவமுறை யாற்றுகைப் பங்கயஞ் சேப்பவொரு சப்பாணி கொட்டி யருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளந் தூரம்மை சப்பாணி கொட்டி யருளே. (௩)

கடவுட் பொலம்பூமி காண்டற் கெழுந்தெனக் கடையுகப் பெருவெள்ள நீர்க் - கடன்மிசை மிதந்திட்ட பூந்தராய் தழையவரு கௌணியர்கள் குலமணிக்கு,—முடவுப் பிறைக்கண்ணி மோலிப் பிரான் சைவ முறைநெறிச் சோகாப்ப வன் - மூடப் புறச்ச

---

(௩) ஐவகைச்சுத்தி - தானசுத்தி திரவியசுத்தி ஆன்மசுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி. அல்குதல் - குவிதல். துவாதசாந்தம் - சிரசின்மேற் பன்னிரண்டங்குலங் கடந்த எல்லை. முத்திரை கொடுக்குங்கால் விரல்களில் நிகழும் குவிதல் விரிதல்களை நயனச்சுடரொதிர் கைத்தாமரைகள் குவிதல் அலர்தல்களாக உருவகித்தார்.

(ச) பூந்தராய் - சீகாழி. கண்ணி - அரும்பு.

மய முழுவதுஞ் சோகாப்ப மூண்டசிலை யோடு புல் லும்,—அடவிக் களிக்குந் தமிழ்க்குரிசி னீறிட வம ண்கைய ருண்ணீறிட - அருண்மடை திறந்தூற்று திருமுலைப் பால்கறந் தமிழ்தரு¹ ளங்குழைத்துத்,— தடவுப்பொன் வள்ளந்து வைத்தூட்டு செங்கை கொடு சப்பாணி கொட்டி யருளே - தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை சப்பாணி கொட்டி யருளே. (௪)

தீங்கனிக் கிளவியால் யான்றவக் கோட்டிய செழுங்கழையு முகமூ ரனீள் - சேயரிக் கண்ணுன் மெலித்தவர விந்தமுந் தேங்கமழு நறுமுல்லையும்,— பூங்குவளை மலருங் கதிர்த்தபொன் மேனியிற் போரிட் டொழித்த தளிர்கள் - பொங்கியொளிர் மாழையும் பிண்டியுஞ் சோகாந்து போதுவன வற்றையணையா,—ஏங்குகட லுலகமுத லெல்லாம் பணித்திடுமிருஞ்சமர்த் திண்மை யுதவி - யிடையாத வில்லென்று மம்பென்றும் வைத்ததென் னென்றுநீ யொன்றொ டொன்றைத்,—தாங்கொளி ததும்பிடத் தாக்கியாங் கங்கைகொடு சப்பாணி கொட்டி யருளே-தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை சப்பாணி கொட்டி யருளே. (௫)

---

(௪) சோகாப்ப என்பவற்றிற்கு, முறையே அரணைக்காக்க எனவும், மயங்க எனவும் பொருள் கொள்க.

சிலை - விற்கொடி. புல் - புலிக்கொடி. இவற்றை அடவிக் களித்தலாவது - இவற்றிற்குரிய சேரசோழருக்கு நாட்டிற் சுதந்தரமில்லையாகச் செய்தல்.

(௫) மாழை - மா.

வேறு.

தவப்பய னைத்தொழு வார்க்கருள் செய்ய தடக் கையி னேற்றுபொலங் - தடவுத் தொடியிற் செறியு மணிக்கட் டத்திப் பாய்ந்திடுநின்,—சிவக்கு மரிக்க ணிமுற்று நிமுற்றுணை செவ்விய நவ்விமறிச் - சீர்செய னோக்கி மகிழ்ந்துற வாடச் சேர்க்குது மென்றுமன ம்,—உவப்ப வுவப்ப மறிந்து மறிந்து முறக்க வவிக்க வவி - உயிர்த்து வளர்த்தருள் கூர்திரு மேனை யுளங் குளி ரச்சுழலும்,—குவைக்கவின் மொய்த்த தளிர்க் கையி னம்பிகை கொட்டுக சப்பாணி - குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில் கொட்டுக சப்பாணி. ()

அரக்கெழில் கொண்டு கனிந்த செழுங்கனி யா கச் சேயொளியை-அள்ளி யிறைக்கு முருக்கலர் போ லழ கார த ரத்தினையும்,— சுரக்கு நறுஞ்சுவை வான மிழ் தேந்து சுடர்த்திரு வள்ளமெனத் - தூய மணித் தர ளத்தொடை பூண்டு துணைத்த தனத்தினையும்,- பரக்கு நிறத்தளி யொன்று பசுங்கதிர் பம்பிய மேனி யையும்-பார்த்துத் துய்த்திட வாயூ றுஞ்சிறு பச்சை யிளங்கிளிதன்,—குருச்சிறை தைவரு மங்கையி னம் பிகை கொட்டுக சப்பாணி - குளந்தை வயங்க வயங் கு மிளங்குயில் கொட்டுக சப்பாணி. (எ)

முழங்கு மிசைச்சிறை வண்டு விருந்துணு மூண் டக நாண்மலர்கள் - மூரி மணித்தவி சாக வளர்ந்த

---

(சு) கவவிச் சுழலும் கை என இயையும்.

ருண் மூவிரு செவ்வுருவும்,—தழங்கு குளங்களை யெய்தி யெடுத்தெழி றங்கிடுமோருருவாத்-தழுவி முலைக்குவடார வணைத்தெதிர் தாய்குத லாற்றகிலா,—தழுங்கி விடுத்தொழி கங்கையுள் வெள்கி யழுங்கி விளர்ப்பமுலை - அமிழ்த மருத்தி வளர்த்தருள் கூர்ந்தருமைச்செய லாற்றியநின்,—கொழுங்கவின் மொய்த்த செழுங்கையி னம்பிகை கொட்டுக சப்பாணி - குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில் கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

மதுகர முலவிய துளப வுரத்தினன் மட்டாரும் - மனைமலர் நிலவிய மறைமுனி பொற்றவி சிற்றேவர்,—முதுமணி முடிகுனி தரவர சிற்பொலி புத்தேளும் - முதலிய வனைவரு முளரி நிகர்த்த கரத்தால் விண்,—ணதிதரு புனலொடு தருமலர் நச்சி யிணைத்தாளின் - நவையறு விதிமுறை சொரிதர மிக்க குளத்தூர்வாழ்,—இதமுறு பரசுக வடிவினள் கொட்டுக சப்பாணி - இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி. (௯)

அருள்பெறு மடியவர் விழியளி சுற்று மணத்தேனே-அவனியி னிடையற மெனவையும்வ ளர்த்த சுவைப்பாகே,—திருமல ரமரர்கள் சொரிதரு பத்ம பதத்தாயே - தெளிமறை நெறியின ருளமொளிர் வித்த சுகப்பேறே,—முருகவிழ் மதுவழி நறுமலர்மொய்த்த

(அ) தழுவி அணைத்து அருத்தி என இயையும்.

குழற்கோதாய் - முனிவரர் மறையவ ரடியர்ப ழிச்சு குளத்தூரின்,— இருமையு முதவிடு மடமயில் கொட்டுக சப்பாணி - இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி. (க0)

சப்பாணிப்பருவ முற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

பகைத்த புரிசை மூன்றுமொரு பதத்தி னிறுத்து திருக்குளந்தைப் - பதியிற் கருணை பூத்தலர்ந்த பரமானந்தப் பெருவாழ்வை,—நிகர்ப்பச் சிறுவெண் மதிகிடந்த நெடுவா னுதன்மேற் போந்துலவி - நெறிக்கும் புருவச் சிலைகோட்டி நெய்த்துப் பழுத்த கொலைவேல்போல்,—வகுத்த மதர்க்கட் சரந்தொடுத்து மணிமே கலைசூ ழல்குலந்தேர் - வாய்ப்ப வெளிக்கொண் டெமதுமும்மை மலச்சேரு வழலப் புன்மூரல்,—முகிழ்க்குந் தரளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே-முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (க)

வளைத்த கருப்புச் சிலையமுதத்து வனசக் கணையு மாங்கணையும்-வாசங் கமழு நறுநீல மலர்ப்பூங் கணையு மசோகினிடைத்,—தளைத்த நனைதாழ் கொடுங்கணையுந் தழுவிக் கொணர்ந்தென் னெடுந்தொடுத்துச் -

---

முத்தப்பருவம் - முத்தங்கொள்ளும் பருவம்.

(க) பதம் - க்ஷணம்.

சகல புவனங் களும்பணிக்குந் தண்ணங் குடையெங் குரிசிலைக்கண்,—டிளைத்த வெரியாற் படப்பொருத திருவார் குளந்தைச் சிவவாழ்வைச் - சிந்தை மருட்டிப் பணிப்பலெனத் திறல்கொண் டெழுந்த தளவம் போன்,—முளைத்த முறுவற் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே-முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (உ)

பிதிரும் பொறிப்பொற் சிறைவிரித்துப் பெருந் தேன் மடுத்துத் தாதளைந்து - பெடையோ டாடிக் களிபூத்துப் பிறழா வகையின் னிசைபாடி,—அதிரும் பலவண் டினமுழக்க வலரும் பொருட்டுத் தேங்கமல - வலர்க்குந் தனக்கும் பகைமையுற வமைத்துக் குளத்து ரமர்ந்தருளிக்,—கதிரும் பெருமா னுளக்கமலந் தனையு மலர்த்தி வயமாக்கிக் - கலப்பா னெழுந்தா லெனவதனக் கலைவாண் மதியி னரும்புநிலா,—முதிரும் பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே-முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (ங)

கொழுது வரிவண் டினமுரலாக் குளிர்பூந் தொடையன் முடிசாய்த்துக் - கும்பிட் டிறைஞ்சுங் கடவுளர்தங் குழாத்தைச் சிறிது மதியாத,—பழுது நிலவாத் திருக்குளந்தைப் பதிவா ழிறையோன் விழிச்சுடரின்,—பரிசு நோக்கி மணியிதழ்க்க பாடஞ் சிறிதே திறந்

(ங) கலப்பான் - கலக்க.

துருவம்,—எழுதும் வினைஞர் தொழிற்கடங்கா வெ ழிலார் தனதொள் ளொளிகாட்டி - எழுந்தச் சுடரை வயமாக்கி யேக்கற் றமையம் பார்த்திருப்ப,—முழுது மடிமைக் கொளுநகைவாய் முத்துந் தருக முத்தமே- முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே.

இகந்த மனத்தாற் கடல்கடைந்த விமையோர் வெருவ வெழுங்காளம் - எடுத்துப் பருகுந் திருக்குள ங்தை யிறைவன் பவளத் திருவாய்க்கும், — சகந்த னிலைமை தவாதோங்கத் தாவிக் குதிக்குஞ் சிறுமறி மான் - தழங்கு மரும்பே ரொலிமுழுதுந் தாங்குஞ் செவிக்கு மருந்தாக,—உகந்த வொளிதுன் றியவெயி ற்றி னூறு மமிழ்தப் பெருக்காறும்-உரைப்பா ணமிழ் தப் பெருக்காறு மூட்டிக் களிகூர்ந் தெழிற்கடலே,— முகந்த பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்த மே - முருகு விரியு நறுங்களப முலையாய் முத்தந் தருகவே. (௫)

வேறு.

அசும்புபட வாய்நீர் வழிந்தோட வோடிவந் த ணையுமைங் கரக்க ளிற்றை - ஆகத் திடைக்கொண்ட ணுப்பட் டடித்தென வணைத்தலும் பணைத்து வளர் பொற்,—றசும்புதனை யெதிருமிரு களிறெனத் தன்ம த் தகங்கொண்டு தாக்கி மயிரின்-றண்ணிய வொழுக்

(௫) இகத்தல் - ஈண்டு இறைவனை வழிபடாமை. ஓங்கத் தாங்குமென இயையும்.

(சு) தடித்து - மின்னல்.

கினை யணைக்குமொரு கங்தெனத் தடவுக்கை யாற்சு ழியவவ்,—விசும்புண்மறை பட்டெழுங் தெண்ணி லா வெனநகை விரித்தொல்லே மேலெ டுத்து-வெகு ளிதீர்த் துளங்குழைய முத்தாடி வைத்தாடும் வியன கர்க் குளங்தை வாழ்வே,—பசும்பொனவிர் திருமே னி யழகொளிர நின்றுநின் பனிவாயின் முத்த மரு ளே-பங்கயச் செல்விதொழு மங்கையர்க் கரசிநின் பனிவாயின் முத்த மருளே. (௬)

சேட்டின மணிச்சோதி நீட்டுமிலே ஞாங்கர்நுதி தீட்டுநின் ஞட்டத் திறற்-றெள்ளிய வருட்பார்வை வெள்ளவமிழ் தம்மைநீ தேக்கிடவு நீக்கி யளகக்,— காட்டினைக் காட்டிமயல் பூட்டிளம் பேட்டனக் கவி னடைக் கன்னிய ரிடைக்-கட்டுண்டு மட்டுண்டு தட் டுண்டு பட்டிறுங் காளையரின் மாளுந ரென,—மூட்டி யபொன் மாடகத் தியாழுக்கு மிசையூட்டு மொழிய மிழ்த மூட்ட விட்டு - மோட்டிருங் கோட்டுக் குவட் டைநிகர் வட்டமுலே முத்தையமிழ் தென்றேக்க றாஉம்,—பாட்டிசைக் கிள்ளேக்கு மீட்டுமிசை யூட்டு நின் பனிவாயின் முத்த மருளே - பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின் பனிவாயின் முத்த மருளே. (எ)

(எ) சேட்டினமணி=சேண்+தினமணி. ஞாங்கர் - வேல். நீக்கிக் காளையராய் மாளுநர் என இயையும்.

ஏக்கறல் - வேணவாவுறுதல்.

மகாமகோபாத்தியாய ...நிகாகை

மடல்கொண்ட பூந்துழாய்ப் படலைமணி மார்பி ஞன் மறைக்கிழவ ஞதி யண்ட - வாணரும் பதைப தைத் தோட்டெடுப் பக்கொடிய வளைகடற் புனன்மீ தெழும்,—விடமுண்ட சோமேச ஞர்க்கினிய வாய மிழ்த மெல்லெனப் பருகு வித்து - விளியாத வண் ணமென் கொங்கையஞ் சஞ்சீவி வெற்புங் கொடுத்து மற்றும்,—உடனென்றி மணிமிடற் றுலவா திருத்த லா னெருகணப் பொழுது மகலா - துருப்பாதி யிற் கலந் தனுதினம் பாதுகாத் தொண்குளத் தூரின் மரு வும்,—படமொன்று மரவல்கு லெழிலமுத வல்லி நின் பனிவாயின் முத்த மருளே - பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின் பனிவாயின் முத்த மருளே. (அ)

வேறு.

சூறவே றியகொடி முதலா கியபடை சுற்றி வரத் தனிபோய்ச் - சுவைநீள் சிலைகொடு மலரார் பகழி தூரக்கு மதக்கொடுவேள்,—இறவே நுதல்விழி வழி யூ டழ்லெழு வித்த திறற்பெருமான் - எரிபோ லொ ளிவிடு சடைமா முடியி னிருக்கு மதிக்கடவுள்,— வெறியார் திலகம தணிவா ணுதலெழி லிற்குளம் வட்கிநமு - விரிபூ விதழியை நடுமே னியினிறு விப் பொரு வக்கருதும்,—முறிபோ லுருவினள் கமலா கரமயின் முத்த மளித்தருளே - முதுநான் மறையுறி வறியா வடிவினண் முத்த மளித்தருளே. (௯)

(௯) வட்கல் - நாணுதல். முறி - தளிர்.

பெருகா ரமிழ்தரு ளொளிசேர் மதியெழில் பெ
ற்ற நுதற்கொடியே - பிறவா வருணெறி தருவா யெ
னுமவர் பெட்பி னுளச்சுவையே,—மருவார் தகரமு
மளிவீழ் மலரு மணத்த குழற்றிருவே - மதியா தவ
ருளா மருவா திருளென வைத்த மடப்பிடியே,—
உருகா நெறியெம துளமா சறவு மொறுக்கு மறக்கட
லே - உருவா யளவரு மருவாய் நிறைபொரு ளூக்
கொரு வைப்பிடமே,—முருகார் பொழிலணி கம
லா கரமயின் முத்த மளித்தருளே - முதுநான் மறை
யறி வறியா வடிவினண் முத்த மளித்தருளே. (௧0)

முத்தப்பருவ முற்றிற்று.

---

## வாரானைப்பருவம்.

வெள்ளித் தகட்டையரில் கொள்ளத் துறுத்த
னைய வெள்ளிய சிறைப்ப வளவாய் - வெள்ளோதி
மத்திரள்கள் செஞ்சிலம் பொலியினையு மென்மடப்
பிடியி னத்தை,—எள்ளிக் கவின்கொண்ட திருநடை
ப் பொலிவினையு மெய்யாது கற்க வெண்ணி - இக
பரப் பெருவாழ்வு வேட்டவர்க் கருளுநின் னிணைய
டிக் கமல மலரை,—உள்ளித் தொடர்ந்துசூழ் மொ
ய்த்திடுஞ் சூழலிடை யுற்றுநீ யச்சு றலி-னெடும்பெ
யர்ந் தவிர்மதிய மூர்ந்துவர லேய்ப்பவொளி மாம

---

வாரானைப்பருவம் - வருகையை விரும்பிய பருவம். இதில்
ஆனை தொழிற்பெயர் விகுதி.

(௧) அரில் - பகை. எய்யாது - இளையாது.

ணிக ளிருகரை யினும்,—அள்ளிச் சொரிந்துலவு பா
லிநா டாளவரு மமுதாம்பி கைவருகவே - அருண்ம
டை திறந்தூற்று புன்மூா லழகொளிர வம்பொனு
யகிவருகவே. (க)

துளிபட்ட தேந்தொடைக் கூந்தலைக் காரொன்று
தோகைமுன் னுடி வரமென் - றுணைமலர்ப் பாத
நடை கற்கவன் னத்திர டொடர்ந்துபின் னோடி வர
வுட்,—களிபட்ட தீங்கிளவி கற்குநின் செந்தளிர்க்
கைக்கிள்ளை பாடி வரவான் - கருணைபொழி கட்க
டைப் பார்வையை வியந்துமான் கன்றினங் கூடி வர
மெய்,—யொளிபட்ட வேதக் குழாங்கதறி யோலிட்
டுணைப்பெரிது நேடி வரவில் - லுமிழ்மணிக் கோ
வைக் குரூஉப்பரும மீமிசை யுடுத்தவிடை வாடி வர
மை,—அளிபட்ட பூஞ்சோலை சூழ்குளத் தூரில்வரு
மமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று
புன்மூர லழகொளிர வம்பொனு யகிவருகவே. (உ)

வில்லுமிழ் குரூஉமணிச் சுடிகைப் பணிக்குழாம்
விரித்தஃப நெரித்துருத்து-வீசுங் கலாபப் பசுந்தோ
கை யீட்டங்கண் மெல்லியலு நடையும் வேட்டு,—
வல்லுறழ் மணிக்கோவை தாழ்ந்தமென் கொங்கை
நின் மருங்குறச் சூழ்ந்து வரவவ்-வளரிளஞ் சாயலா
னடையினுன் வேறறிய மாட்டாது மருளு மெம்
மை,—எல்லொளித் தண்ணிலா நகைகொண்டு தேற்

(௩) மென் கொங்கை - அன்மொழித்தொகை.

றிமற் றிருக்காதி யான நான்கும் - இன்னங் கிடந்து முறை யிட்டுமேறி வரியகின் னியல்பினைக் காட்டி யருளி,—அல்லுமிழ் தடம்பொங்கர் சூழ்குளத் தூரி ல்வரு மமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லமுகொளிர வம்பொனு யகி வருகவே. (௩)

வயிரா வணங்தொறு மெழுங்குளத் தூர்வந்து வான்கோடி ரண்டா யிரம் - வாய்த்ததனை யாளும் பிராணைமரு மத்திரு மருப்பினு லாளாண் மையும்,— செயிரா வணங்கினைப் பல்லுயிரு மெய்தத் தெறூஉ மலக் களிறைந் தையும் - திக்கெட்டு மண்டப் பரப் புங் கடந்திறச் செற்றிடும் விழிவீ ரமும்,— பயிரா வணஞ்சொரியு மேகத்தி னருள்கூர்ந்த பதநடையு நோக்கி யஞ்சிப் - பனிமா லடுக்கலெனு நுந்தைநின் னுரிமைபாற் பரிந்துபின் வருத லேய்ப்ப,— அயிரா வணம்பின்பு தொடரத் தொடைக்கூந்த லமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லமுகொளிர வம்பொனு யகிவருகவே. (௪)

(௪) வயிர் - ஊதுகொம்பு. செயிரா - செயிர்த்து. அஞ்சித் தொடரவென இயையும். அயிராவணம் இருபக்கத்தும் தனித் தனி ஆயிரம் கோடுடைத்தாய்ச் சிவபெருமானுக்கு உரித்தா தலை "இரையிரா - யாயிரம் வகுத்த மாயிரு மருப்பின் - வெண் ணிறச் செங்கண் வேழமும்" என்னும் கோயினான்மணிமாலை யானு முணர்க. மலக்களிறைந்து - ஆணவம் கன்மம் மாயை திரோதை மாயேயம். பயிராவணம் - பயிர்விருத்தியாகும்படி; இதில் ஆ வினைத்தொகையாய் நின்ற பகுதி.

விந்தையங் கிரிதனக் கிகலியுள் ளதுமுற்றும் வீங் தவீ றின்மை யுந்தண் - வெள்ளிவே தண்டமொ ரா க்கன் பெயர்த்திட்ட மென்மையுங் ககன மீறும்,—மந் தர முதற்கிரி யிடைக்கட் பொலிந்தண்ட மார்க்கத் திரண்டு சுடரும் - வலமாய் வரப்புவிக் காதாரமான தன் வன்மையையு நோக்கி நோக்கிச்,—சிந்தைகளி கூறுமா மேருவைச் சிவபிரான் செங்கமல வங்கை பத்தும் - சேர்ந்து நித்தலுமுழக் கத்தளர்ந் தொசி யாது செம்மாந்து விம்மி யெள்ளும்,—அந்தனச் சிகரி மிசை யருவிநித் திலமிட்ட வமுதாம்பி கைவருகவே - அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர வம் பொனு யகிவருகவே. (ரு)

வேறு.

தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித் திட்டா நிலைமைத் தெனவுலகிற் - றெரிக்குங் காழித் திருஞானச் செம் மற் குழவிக் கருண்ஞானம்,—பெய்து குழைக்க வோ முலையாம் பெரிய மலைவா யுறுத்துமென்றோ - பெரு மான் றனையுங் குழைத்தவலிப் பெற்றி யறிந்து தடுத் தோயும்,—கையி லிலகு நகக்குறிபற் கதுவ னோ மென் றோதீம்பால் - கறந்து கொடுத்தா யெனச்சகி

(ரு) இறைவர் இருகாங்கொண்டு தொட்ட மாத்திரத்தே வில்லாய்க் குழைந்த மேருப்போலாது அம்பிகையின் அழகிய தனமலைகள் செம்மாந்து விம்மலின் அதனை எள்ளாநின்ற தென்பதூ.

மார் கனிந்து பாட நகைமுகிழ்க்கும்,— வைவைத் தமைத்த மதர்வேற்கண் வாழ்வே வருக வருகவே - வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (௬)

குஞ்சி யசைய வசைந்துவருங் குமரப் பெருமான் றனையேந்துங் - குளிர்பூங் கரத்துத் தொடிகறங்கக் கொடிபோ லொசியுஞ் சிறுமருங்குல்,—அஞ்சி நுடங்க வம்மருங்கு லணிந்த பருமங் கதிர்த்தேங்க-அணங்கு மிடைகண் டிரங்குவபோ லவிரு மணிநூ புர மொலிப்பப்,—பஞ்சி திருத்துஞ் சீறடிகள் பதிந்த சுவடு தொறுமிமையோர் - பனிகான் மோலி நிரைபுரளப் பதுமை முதலோர் களிதூங்க,— மஞ்சி வரும் பூங் குழற்கற்றை மாதே வருக வருகவே - வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (௭)

கடிகொண் டலரு நறுங்கடுக்கைக் கடவுண் மகிழப் பேரண்ட - கடாகப் பரப்பே சிற்றிலெனக் கருமப் பகுப்பே சிறுசோறும்,—படிகொண் டுயிராம் பாவைகட்குப் பைதன் மலநோய்ப் பசியிரியப் - பல்கா லயிற்றி விளையாடிப் பரமா னந்தப் பெருவீட்டிற்,—குடிகொண் டிருக்குந் தீங்கரும்பே கொள்ளத் தெவிட்டாச் சுவையமுதே - குன்றம் பயந்த நறுங்

(௬) வை - கூர்மை.

(௭) இமையோர்மோலிபுரளல் அம்பிகையின் பாதச்சுவடு காணப்பெற்ற ஆர்வத்தால் வணங்கல். பதுமை - இலக்குமி. மஞ்சு இவர்தல் - (கருமையால்) மேகமும் விரும்பல்.

(அ) பைதல் - துன்பம்.

கனியே கொழிக்குங் கருணைப் பெருக்காறே - மடி கொண் டயரா தெமைப்புரக்கும் வாழ்வே வருக வருகவே - வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே. (அ)

தீது விளக்குங் களப்பணியுந் தேவர் குரவன் மனைச்செல்வி-திருக்கற் பளித்த களப்பணியுந் திளைத் துக் கலவி செயப்புகுங்காற், — கோது விளக்கும் பேரச்சக் குணமு நாணுங் கொடுக்குமெனக்-குறியே னினது சாயலுமின் கொழிக்குங் காஞ்சி யல்குலு மே,—போது விளக்குஞ் சடைக்காட்டிற் புகுந்து வெளிக்கொ ளாதொளிகசுப் - பொலிவு தருமா லெ னச் சகிமார் புகலச் சற்றே நகைத்தளிகள்,—வாது விளக்கு முடிசாய்க்கு மாதே வருக வருகவே - வள ங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே.

அயில்கண் டனையஞ் சலித்தேத்து மன்னை வருக பெருங்கருணை - யாழி வருக தீவினையே மாவித் துணையே வருகவிடங்,—துயில்கண் டனையம் பலத் தாட்டுஞ் சுடர்பொற் கொடியே வருகவிளஞ் - சுக மே வருக நறுங்குதலை தோற்றுங் கிளவி யெனுமது

(௯) களம என்பவற்றில் முன்னது விஷம்; பின்னது கள ளம்; இது இடைக்குறையாயிற்று. இருபணியும் ஒளிக்கச் சா யலும் அல்குலும் பொலிவுதரும் என்க. முடியிற் புனையப்படுத சந்திரனைப் பக

(௧௦) அயில்கண்டனை - அயில் கண் தனை எனப்பிரிக்க. மது ரம்பயில் கண்டு - கற்கண்டு. அனையா - அன்னையா.

(கா) [illegible]

ரம்,—பயில்கண் டனையர் செவிக்கூட்டும் பசுங்கோ கிலமே வருகவென்றும்-பருகத் தெவிட்டாச் சுவை யமுதப் பாவாய் வருக பசுந்தோகை,—மயில்கண் டனைய விளஞ்சாயன் மாதே வருக வருகவே - வளங் கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே.()

வாரானைப்பருவ முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

பொன்பூத் தலர்ந்தவன் மரவங்கண் மாலரி பொ ருங்களிற் றினம ளாவிப் - பொங்குமலை வாய்வருங் காரணத் தாற்செய்ய பொன்னஞ் சிலம் படியினின்,- மின்பூத்து நாளும் புலம்புறச் சூழ்தலான் மிடையு மங் கமல மயர - மிக்குறுங் குவலய மடங்கலுங் களி தூங்க விரியொளிக் கதிர் வீசலாற்,— கொன்பூத்த பெருமானை யணைதலால் வேளெனுங் குழகற்கு மகி ழ்செய்த லாற் - கோமளப் பெண்செய்கை நின்செய் கை போலுமாற் கூர்ந்துணரி னிவளை யன்றி,—அன் பூற் றெடுப்பவிளை யாடுதுணை வேறில்லை யம்புலீ யா ட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே. (க)

வலிய குங்கும மரங்களும் பெருமைபெற்ற சிங்கங்களும் யானைகளுங் கொண்டு மிக்க மலையிலுதித்தமையாலும், சிலம்பு கள் அடிகளில் ஒளிவீசித் தினமும் ஒலிபொருந்தக் கவிந்திரு த்தலாலும், செறியும் பலசத்திகளையுடைய ஆணவமலஞ் சோர வடையவும் உலகமுற்றுங்களிக்கவும் ஞானவொளியைப் பர

அம்புலிப்பருவம் - சந்திரனை விளையாட அழைக்கும் பருவம்

ப்பலாலும், பெருமானை யணைதலாலும், முருகக்கடவுளென்னும் புதல்வருக்கு மகிழ்செய்தலாலும், அம்பிகையை ஒப்பாக்கிய தென்க. ஈண்டு அங்கமென்றது ஆணவத்தின் உறுப்பாகிய பலசத்திகளை.

இலக்குமியும் பூத்தலர்ந்த கற்பக விருக்ஷங்களும் உச்சயிச்சிரவமென்னும் குதிரையும் ஐராவதமென்னும் யானையும் ஒருங்குதித்த பாற்கடலிற் றோன்றினமையாலும், மேருவினடியில் ஒளிவீசித் தினமும் வருத்தமிகச் சூழ்தலாலும், கமலங்கள் வாடவும் குவளைமுற்றும் களிக்கவும் சந்திரிகையைப் பரப்பலாலும், பெருமான் முடியிலணைதலாலும், மன்மதனுக்கு மகிழ் செய்தலாலும், சந்திரனை ஒப்பாக்கியதென்க. ஈண்டு மரவம் என்புழி வகரம் விரித்தல்விகாரம். மால் - மேகம், காற்று ; அரி-சிங்கம், பாம்பு ; களிறு-யானை, களிற்றுமீன். என்னலும் ஒன்று.

மண்டலம் புகழாத வன்படுஞ் செவ்வியின் மாண்
டவனை யுச்சி மீது - வயங்கிய கரஞ்சேர்த்தி யாணவ
விருட்குழா மாற்றிநற் பசுமென் பயிர்,—கண்டகமகி
ழ்ந்துநெடு வானுற விளைந்தொளி கலந்தமணி கான்ற
கதிர்நீள் - கடிநாறு தன்னடி வணங்கவெளி வந்து
தெண் கடலுலக முற்று மேத்த,—விண்டல நெருங்
குமீன் கணமாதர் புடைசூழ மேவியுல கந்தன தியல்-
வீறுபெற நோக்கினு லீமாண் கலைப்பொலிவு மெய்
மையிற் காட்டு முறையால்,—அண்டர்தொழு மெம்
மையா ளம்மையை நிகர்ப்பைநீ யம்புலீ யாட வாவே-
அழகுவள ருங்குளத் தாரமுத வல்லியுட னம்புலீ
யாட வாவே. (உ)

உலகினரால் வெறுக்கப்படும் ஆணவமல வன்மையை ஒழித்

அஸ்தமத்தக சையோக தீக்ஷைபுரிந்து ஆணவ விருட்குழாத்தை யொழித்தும், பசுக்கள் நெடிய வானுறுதற்குத் தன்னடி வணங்க அவற்றிற்கு எளிது தோன்றியருளியும், உலகமேத்தவும் மீன்போலுங் கண்களையுடைய விண்மாதர்கள் புடைசூழவும் மேவியும், சோடசகலாரூபியாய் விளங்கலின் அம்பிகையை ஒப்பாக்கியதென்க. தவளை வேற்றுமைமயக்கம். பசு - ஆன்மாக்கள். அவை மேன்மேன் முதிர்தற் குரியவாகலின் மென்பயிரென்றார். நெடுவான்-சிவலோகாதிபதங்கள். மணி-முத்துக்கள். அடியை முதநீன்ற தாமரையாக உருவகித்தபடி. நாலீரெண்கலை யெனப்பிரித்து அறுபத்துநான்கு கலாரூபி என்னலும் ஒன்று. மேவிக்காட்டும் என இயையும்.

ஆதவன் அத்தமிக்கும் தருணத்தில் வரையுச்சியிற் கிரணங்களைப்பரப்பிச் செருக்கிய விருட்குழாத்தை யகற்றியும், பயிர்கள் தழைத்து ஆகாயத்தை யளாவவும் விளைவுற்றதாய் முத்தீன்ற கதிர்நீண்ட பயிர்கள் தலைவளைந்து தன்னடி வணங்கவும் வெளிவந்தும், உலகமேத்தவும், தன்மனைவியராகிய விண்மீன்மாதர்கள் புடைசூழவும் வதிந்தும், சோடசகலாரூபியாய் விளங்கலின் அம்புலியை ஒப்பாக்கிய தென்க.

கங்கையும் பாந்தளும் தும்பையுஞ் செம்பொற்
கடுக்கைச் செழுந் தொடையலுங் - கபாலமுங் கொக்
கிறகு மூற்றிருந் தொழுகுதேங் கமழ்ந்தபூ மத்தமு
நறுங்,—கொங்குதவ ழாத்தியும் வன்னியு மெருக்குங்
குளிர்ந்தவறு கம்புல்லு மேற் - கோமளப் புலவோ
ரிறைக்குமந் தாரமுங் கொய்துதவர் தூற்றுமலரும்,—
தங்கிய பிரான்சடைக் காட்டினி லுனக்குரிமை சற்ற
லால் வேறுமுண்டோ - தாவிலெண் ணெண்கவய வத்
தினைந்த செம்பாதி தனதெனக் கொண்டு வாழும்,—

அங்கவ ணினக்கதிக மென்பதற் கையமிலை யம்புலீ யாட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லி யுட னம்புலீ யாட வாவே. (௩)

உருநிறை யுவாத்தோறும் வாக்குநின் னமிழ்துண் ட வும்பர்த் தலத்தி னிமையோர் - உவாக்கட லுயிர்த்தவிட முன்னிற்ற லாற்றற்கு மொல்கினர்கள் சாவா திரார்,—குருநிறை மணிக்கச் சணிந்தவிவள் பவள வாய்க் கொழியமுதம் வாய் மடுத்த - கோமளச் சோமேசர் விடமயின் றூற்றலுங் கொண்டன ரிறத்த லிலர்மற்,—றிருணிறை யிராவினை விளைத்தியிவ ளுண்ணிறையு மிருளிரா வினை முழுவதும் - இரித்திடுவ ளாதலா லிவளொடும் பொன்னே டிரும்பனையை மன்ற வரிபாய், — அருணிறை கடைக்கண்வைத் தெம்மையா ளம்மையுட னம்புலீ யாட வாவே-அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே.

தெளிக்குமெய் யன்பினல் வழிபட்ட நாளுனது செல்லலேனைய் தவிர்த்த ளித்த - திருச்சோம நாதனு ருண்டருளு நஞ்சுஞ் சினந்தவிர்ந் துள்ளொடுங்கத்,— துளிக்குமெழி லங்கைத் தலத்திற் றடுத்திட்ட சுவையமிழ் திருப்ப வமிழ்தந் - துணைக்கரத் தேந்திப் பசிப்பிணி தெறத்தினந் துயருழந் துழல்வோ னெனக்,— களிக்குமுறை தேற்றுது வாளரா வுண்டுண்டு கக்கத் திகைத்து வெருவிக் - ககனவெளி யோடியும் வடகுவடு சுற்றியுங் கவலுநின் செய்கை நன்றே,—அளிக்

(௫) சுவையமிழ்து - அமுதாம்பிகையென்னும்பொருட்டு.

குல மிளைக்கும் கடிக்குழற் கன்னியுட னம்புலீ யாட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே. (ரு)

வணங்குமுறை யாற்றனது திருவுளப் படிநிற்கு மாந்தர்க்கு மலதி ரோத-மாயேய காமிய மருட்பிணி யவிழ்த்துநான் மறைமுடிவு மெட்டாத தோர்,— குணங்குறி கடந்தபே ரானந்த வெள்ளக் கொழுங்கட றிளைத் தாடிடக் - கொடுத்தருளும் வள்ளன்மை நிற்க மற் றுலகினுங் குளிர்தூங்க வெண்ணுன் கறம்,—இண ங்குவே தாகம வழித்துறை வழாவகை யியற்றியது காணு யலே-ஈங்குநீ வரினினது கறைபோக்கி வேண் டியது மீந்தருள் கொழித் தருளுவாள்,— அணங்கு கொண் டந்தரத் தலையாதெ மம்மையுட னம்புலீ யாட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லி யுட னம்புலீ யாட வாவே. (சா)

குடங்கையல ராற்செம்பொன் மேருவைத் தனு வெனக் கோட்டிய மலைக்கு மருகன் - கோமளச் சிலை மார்பு மைந்தனை யிரட்டித்த குவவுப் புயக் குவடு மேல்,—வடங்கதுவு மோட்டிளங் கோங்கினும் வண் டினு மலங்கக் குழைத் தவணினை-வருகென் றழைத் திடவு மதியா திருத்தியிவன் வன்கதக் கனலி தோய் த்த, —தடங்கட் கொடும்படைச் செய்யசுடர் வேல் கொண்டு தாக்கினுயிர் பொன்றி விடுதல் - சரதமற் றெங்கெங் கொளிப்புறினு மிலனிலாத் தானுமொன்

(எ) வண்டு - கைவளை.

றில்லை கண்டாய், — அடங்கிய தடங்கமல நெஞ்சா தனத்திருவொ டம்புலீ யாட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே.

துடிபட்ட கைத்தலத் தெம்பிரான் மகிழ்தருஞ் சுந்தரப் பெண்ணமிழ் தெனத் - தோன்றும் பிராட்டி யைமுனெண்ணாத தக்கனார் துயர்கூர்ந்து பட்ட பாட்டை,—முடிபட்ட வானவர் குழாத்தோடு முடனின்று முழுவதும் பட்டறிதி யிம் - மொய்குழற்*செல் வியதனை யவமதித் தின்றுநீ முன்னுரு தகன்றொழி வை யேற்,—கடிபட்ட விதழ்தின்று கறுவினு னின் னிலைமை கடிபட்டு மாழ்குவை யலாற்-கலைமுழு மதித்தே வெனும்பழைய பெயரொடுங் கலைமதி யிலாத தேவென்,—றடிபட்ட பாவிற் புதுப்பெயரு மாளுவா யம்புலீ யாட வாவே-அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே. (அ)

சங்கையா னங்கையிவ ளெம்பிரான் புலவியிற் றடங்கருங் கட்கடை நுதி-சற்றே கறுப்புழித் தாமரைச் சிறடிக டாக்குங் கடுந் தொழிலினாற்,—கங்கையா டித் துடித் திவள்கருணை யாற்றினைக் கைகூப்பு மிறையேந்து மான் - கதறிவிழி மானைத் தொழூந்தொடையல் வண்டெடலாங் கருங்குழற் ருவு மரவம்,—மங்கையா டாதபைப் பாந்தளைக் காவென்று வாவுமற் றுங் கு நீயும் - வாணுதன் மதிக்கிறைஞ் சிடுவையன் றே யதனை மதியாத தென்னைகொ லெமக்,— கங்கையா மலகமென வன்புகூ ரம்மையுட னம்புலீ யாட வா

வே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே. (கூ)

கைப்போது நீட்டிமுன் விரித்துனை யழைப்பவுங் காணுதி போல்வந்திலாக் - காரணத் தாலம்மை சீறுதலு மங்கையைக் கரும்பாந்த ளென்றஞ்சி னன்,— இப்போது தாழ்க்கலான் வருவனென் றிதுகாறு மிவ் வாறு தப்பு வித்தோம் - இன்னுநீ வாராது மத்தரிற் றிரிதியே லினியுனக் கேது புகலோ,—செப்போது கொங்கைப் பிராட்டியிவள் சோமேசர் செங்கண் புதைத்த ஞான்று - தினகரச் செல்வனெ டழுங்கித் திகைத்தநின் றிறமறந் தனைபோலு மால்,—அப்போது பட்டதை நினைந்துமற் றிவளுட னம்புலீ யாட வாவே - அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுட னம்புலீ யாட வாவே. (கo)

அம்புலிப்பருவ முற்றிற்று.

## அம்மானைப்பருவம்.

வம்பிய றொடைக்கூந்தன் மீமிசைக் கதிர்வீச வாள்பட்ட கோற்றொ டிக்கை-மலரினைக் கண்டுசில வண்

அம்மானைப்பருவம் - அம்மானை ஆடும்பருவம். இது பெண்பாற் பிள்ளைத்தமிழாதலின் அம்மானை நீராடல் ஊசலென்னும் பருவங்கள் முறையே கூறப்பட்டன. ஆண்பாற் பிள்ளைத்தமிழேல் சிற்றிலழித்தல் சிறுபறைகொட்டல் சிறுதே ருருட்டலென்னும் பருவங்கள் இறுதியில் முறையே கூறப்படும்.

(க) கூந்தலை யிருளாகவும் கைகளைத் தாமரைகளாகவும் நித்திலவம்மானையைச் சந்திரனாகவும் கண்ணொளியைக் களங்கமாகவும் கூறியவாறு. கைகளால் அடியாநின்றன இயையும்.

டத்து மதியங்கள் வனசமி தெனுங் கருத்தாற்,—பம் பியட ரிருள்கண்டு முகிழாமை யாற்றமைப் பரிசித் தல் வேட்ட தாகப் - பாவித் துறுந்தொறுந் தன்று ணைமை யன்மையாற் பங்கயம் விதிர்த்து வெகுளா,— வெம்பியகல் வானத் தெழுந்தோ டிடத்தள்ளி விட லெனச் செங்கைக ளால் - வேலினை யிகந்தொருவி வார்தரு கொடும்புருவ வில்லொடு கிடந்து மிளி ரும்,—அம்பிய றடங்கணொளி கொண்டுலவு நித்தி லத் தம்மானை யாடி யருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (க)

இருள்பூத்த நெறிசுரி கருங்குழ லரம்பையர்களெ ண்ணிலார் கவரி வீச - எறிசுடர் மணித்தவிசு வீற்றி ருந் தரசுபுரி யேந்தல்குல வரைகளோடுங்,—தெருள் பூத்த நுந்தைசிற கீர்த்தமை குறித்துச் செயிர்த்த வனை யண்ட முகடுங் - தெறிபடக் கைக்கொண் டெ றிந்தோச்சி மீளத் திகைத்துவீழ் தோறு முன்றன்,— மருள்பூத்த வெகுளிதணி யாமையாற் பின்னரும் வன்கண்மை கொண்டோச்சல் போன் - மருங்குசூழ் தோழியர்த மிணைவிழியி னீழலை மரீஇச்சுலவி யோ டியாட,—அருள்பூத்த கைகளா லொளிபூத்த மரக தத் தம்மானை யாடி யருளே-ஆரண முழக்குகம லா கர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (உ)

---

(உ) மரகத வம்மானையை யிந்திரனுகவும் தோழியர்க ளிணை விழியினீழலை அவனுடைற் கண்களாகவும் உருவகித்தபடி.

ஒழுங்குபடு மண்டகோ டிகடொறு நிலாவுறூஉ மொண்கமல மாநிதி களும் - ஒலிகொண்ட வெண்சங்க நிதிகளுஞ் சார்ந்தவர்க் குதவுநின் கரநோக்கி வான்,—செழுங்கதியு முய்த்தளித் திடுநிதிய மீதெனத் தேர்ந்துவந் தளவ ளாவித்-திருவாய்ந்து விடைகொண்டு தம்பதி குறித்துமேற் சேண்வழி நடத்தலேய்ப்பக்,—கொழுங்கதிர் பரப்பிக் கவின்றசெம் மணியாற் குயிற்றுமம் மனைகள் பலவும் - குளிர்நிலாக் கான்று வெள் ளொளிவீசு முத்தங் கொழிக்குமம் மனைகள் பலவும்,—அழுங்குமணி மேகலைச் சிற்றிடை யெடுத்தெடுத் தம்மானை யாடி யருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (ங)

தேங்கலுழி யூற்றெடுத் தோடுமம் போருகச் செல்வமட வாரிருவ ருங் - திங்களைக் கண்டினி யிருக்கினெமை நந்தவிசு சிறைசெயு மெனக் கவன்று,—பூங்கமலம் விட்டொரீஇத் தங்கொழுநர் பதியுறப் போகிடைத் திரும்பி நோக்கிப் - புகழ்ந்திவை மதிக்குமுன் முகிழாமை தேர்ந்துளம் பூரித்து வருவதேய்ப்பத்,—தோங்கனியு மும்மலத் துகளீர்க்கு நின்முகஞ் சுடர்பூப்ப வங்கை யேந்தித்-துரிசற்ற பவளத் திழைத்தனவு நித்திலத் தொகையிற் குயிற்றி யனவும்,—ஆங்கமணி வால்வளை தழங்கிட வெடுத்தெடுத் தம்மானை யாடி யருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (ச)

(ச) தோம் - குற்றம். ஆங்கவென்பது ஆங்கென்னும் அசைநிலையின் விகாரம்.

புத்தமிழ் துகுத்துமணி மோலியக் கடவுளர் புனைப்பசிப் பிணித விர்த்துப்-பூதல மருங்கினும் பைங்கூழ்த் தொகுப்பெலாம் பூரிப்ப மாந்தர் முகனுஞ்,—சித்தமுமலர்ந்துகளி கூரச் செழுங்கலைத் தீங்கதிர் பரப்பி யுலவும் - திங்கட் பிரான்செந் துவர்க்கொடி படர்ந்தவெண் டிரைமுகட் டெழுங் காலையுங்,—தத்தலை விரிக்கும் குடாதுகட லுட்புகுஞ் சமயத்தி னுஞ் சேத்தல் போற் - றடங்கையி லெடுத்தெறியு மேல்வையினு மற்றது தடங்கையிற் புகும்போழ்தி னும்,—அத்தமுமிழ் சேயொளி கவர்ந்தொளிரு நித்திலத் தம்மானை யாடி யருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (ரு)

மருள்கான்ற நெஞ்சச் சழக்கைத் தடிந்தின்ப வான்கதி கொடுக்கு நின்கை - வயங்குபொற் கடகத் திருங்கவின் முகந்துமலர் வள்ளலை நிகர்த்து விழியின்,—இருள்கான்ற நீலங் கவர்ந்தராப் பாயலிடையேந்தலை நிகர்த்து நுதலின் - இட்டசிந் துரவெழில் கவர்ந்துநின் கொண்களை யிணைந்துமேற் போந்துலாவித்,—தெருள்கான் றெவற்றினுந் தோய்வற்று நின்றவச் சிற்பரம் பொருளை யொத்துச் - சேணுடர் கொண்டாட வாடச் செழுங்கருணை தேக்கிநிறை சோமேச னார், — அருள்கான்ற கண்களி பயப்பமணி நித்திலத் தம்மானை யாடி யருளே - ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி யம்மானை யாடி யருளே. (சு)

(சு) இணைதல்-ஒத்தல். ஒத்து ஆட ஆடியருளென இயையும்.

வேறு.

மூத்த மிழைத்தன வும்பவ ளத்திரன் மொய்த்தன வுங்கலைகண் - முற்று நிறைந்த பசுங்கிர ணச்செழு முழுமதி யாமெனவும்,—எத்திசை யுங்கதிர் கான்றிருள் சீத்தெழு மென்றூ மூமெனவும் - எண்ணி யுணற்கெழு மூன்று ளராவு மிருஞ்சிறை நேமியுநின்,—னுத்தி மூலைக்கு மிடைக்கு மிடைந்தய லோடவும் வெம்பசியால் - உயங்கு சகோர மயங்கி யுடன்றிரி வுற்று வருந்தவுமென்,—னத்த னுளத்தி னடிக்கு மடப்பிடி யாடுக வம்மனையே-அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (எ)

வடங்கெழு கொங்கை நிகர்ப்ப வளர்ந்த வடாது பொருப்பினைநின் - மகிணர் கரத்தினி லின்னும் வளைத்திடு மாறொரு சூழ்ச்சிநினைந்,—துடங்கழி மூன்று புரங்களை மீண்டு முலாவ வெழுப்பிவரம் - உதவி வெளிக்கண் விடுத்தல் கடுத்திட வொள்ளொளி முத்தினுமோர்,—முடங்க லுரூதொளிர் நீல மயத்தினு மொய்த்த பசும்பொனினும் - முற்ற வமைத்து விடுத்தரு ளம்மனை மூன்றும்விண் மீதுலவ,—அடங்கிய வன்ப ருளங்குடி கொண்டவ ளாடுக வம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (அ)

(எ) என்றூழ் - சூரியன். மூன்றுள்-நேமிப்புள் சூரியகிரணத்தை யுண்பது; சகோரப்புள் சந்திரகிரணத்தை யுண்பது; அரவுகள் இரண்டையும் உண்பன. அரவு இடைக்கு இடைந்த

உய்ய வரந்தரு நித்தன் முகத்தி லுயங்க முனந்த கையும் - ஒண்கர மின்னு மொறுத்த லுருதுற வாடி நயப்ப மெனு,—வெய்ய நெருப்பெழு செங்கதி ருங் குளிர் வீசு பனிக்கதிரும் - மேவி யகங்கையி னோடுறு கேண்மை விளைத்துவிண் ணேகு தல்போற்,— செய்ய மணிப்பவ ளத்தி னிழைத்த செழுந்திர ளம்மனையுந் - தெள்ளிய முத்தி னிழைத்த கதிர்க்குவை சிந்திய வம்மனையும்,—ஐய நுசுப்பொசி யத்தளி ரங் கையி னுடுக வம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (௯)

கதிருமிழ் நீல மணித்திரண் மொய்த்த கருஞ்சுடரம்மனைநின் - கட்படை யாலடி யார்மல மோடல் கடுப்ப வெழுந்துலவ,—முதிரொளி துற்ற செழும் பவ ளத்திரண் முற்றிய வம்மனையம் - மும்மலம் வென்ற திறற்பிர தாப முளைத்தெழ லொத்தெழவெண், — மதிநிகர் முத்த நிரைத்து வனைந்தவம் மானை யதன்பிறகே - வயங்கிய கீர்த்தி திரண்டெழு கின்றது மான வெழுந்துலவு,—அதிர்வளை யங்கையி னலமு தாம்பிகை யாடுக வம்மனையே - அரந்தை துரந்து குளந்தை புரந்தவ ளாடுக வம்மனையே. (௧௦)

அம்மானைப்பருவ முற்றிற்று.

# நீராடற்பருவம்.

தேங்கிய செழுங்கலைத் திங்களுக் கருள்செய்த செல்வர்முடி மீதுதானும் - திளைத்தாடு முரிமையாற் றிளைத்தாடு வோர்க்கெலாந் தீப்பிணிப் பவந்தெறுதலால்,—ஓங்கிய கலித்திரைக் கங்கையொன் றேநம்மை யொத்ததா மென்றதனொடும் - உறவாடல் வேட்டெழுந் தாலென்ன விண்ணத் துயர்ந்துடுக் கூட்டமலைமேற் - றூங்கிய கிளைக்குலங் கான்றமணி யைத்தனது சாதியென வோகைகூரத்-தண்கதிர்க் கடவுளொடு செங்கதிரை யண்டத் தடஞ் சுவர்ப் பிடரினேற்றி,—வீங்கிய வொலிக்கூட்ட மீன்றுவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (க)

இருகவு ளுடைந்தூற்று பூங்கடாங் கமழ்முகத் தெறும்வலிக் குழூஉக்களிறெலாம் - எழிலிக் குழாத்திற் பெயர்ந்துழி தருஞ்சிகரி யிடமாதி நான்குமாற்றத்,—தருவள னடங்கத் தழீஇக்கொண்டு பின்னவை தளர்ந்துகலி கூராவகை - சாலவெதிரொன்றுக் கனந்தமாப் பெருவளன் றண்டா தளித்துவரிசூழ், — அருகில னிடத்தொருவர் இனையளவை யாற்றிடினு மருளினிலை பெறுவாழ்க்கையோ-

---

நீராடற்பருவம் - நீர்விளையாடற்பருவம்.

(உ) சிகரி - மலை. கலி - வறுமை. அளித்து ஒத்துவரு பாலி

டழியாத திருவுமெதி ராங்கவர்க் குதவுநின் னடிய வரை யொத்துமாக்கள்,—வெருவியய லோடத் தழங்கிவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (உ)

வளைத்தமுப் புரிசைத் தலத்திளின் றயில்கொண்ட வாளிக்கு மூமெழுதல்போல் - வயங்கிய பசும் பொற் றிரட்குவட் டினையும்வல வாளரித் திரளையு நெடுங்,—துளைத்தகை முகக்கடாக் குஞ்சரத் தினையுஞ் சுழிக்குமச் சுழிமூன்றினுங் - துண்ணென வெழுந்தநெட் டெடல்வாளை தெய்வத் துறைப்புனற் கங்கை நதியிற்,—றிளைத்ததிற நோக்குவார்க் கிப் புனல் படிந்தாடு செய்தவப் பயனையிந்தத் - திண்பூத பரிணும தேகத்தி லுதவுமா தீர்த்தமிது வெனவியப்பு,—விளைத்துவிண் ணுடும் பழிச்சவரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே.

திரைத்தொலி பரப்பியலை வீசும் பெருங்கடற் றீம்பயம் பருகியார்த்துச் - செல்லின மெழுந்துநெடு வான்படர்த லுந்தனது தீர்த்தம் படிந்தாடுநர்,—புரை

(ங) பூதசார தேகத்தால் எய்தற்குரிய தெய்வப்புனற்கங்கையை இவ்வுலகிற்குரிய பூதபரிணமதேகத்தா லெய்துவிப்பது வியப்பாகலின் வியப்பு விளைத்தென்றார்.

பரிணமம் - திரிதல்.

த்தொகை விளைக்குமல மாயைகன் மக்குழாம் பொ
ன்னென விரிந்தோடலும் - புனையக் கருங்குழற்
காட்டுமலர் கூரும் பொலஞ்சிறைத் தும்பிமுழு
தும்,—இரைத்துமணி வானத் தெழுந்தோட நீராடு
மேந்திளங் கொங்கைமடவார் - ஏறிட்ட மணியணி
கள் சிந்திய கரைக்கணின் னிணையடி வருந்தாவ
கை,—விரைத்துணர் நிரம்பப் பரப்பிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே-வெறிநறுச் சோலைசூழ்தென்
குளத் தூரம்மை வெள்ளநீ ராடியருளே. (௪)

கொழுந்தாம மாடவது சுற்றுங் குழற்கற்றை
கூட்டுவிட் டாடவதனிற் - குடிகொண்ட மாதர்ச்
சுருப்பின முழகேரெனக் குரல்விளைத் தாடவது
சூழ்,—செழுந்தா துகுங்கஞ்ச வெள்ளனந் திரையூடு
சேர்ந்தாட வதனருகுநின் - திருமேனி கண்டின
மெனப்பிணி முகக்குலஞ் சிறைவிரித் தாடவது
போல்,—எழுந்தாடு தெய்வப் பிணக்குழாங் கண்டு
கண்டின்பநீ ராடவவர்தோள் - இணங்கும் பெரும்
புலவர் கைகொட்டி யாடவெள் ளீர்ம்புனற் கங்கை
புலிமேல், — விழுந்தாங் கொழுங்குகொண் டாடி
வரு பாலிநதி வெள்ளநீ ராடியருளே - வெறிநறுச்
சோலைசூழ் தென்குளத் தூரம்மை வெள்ளநீ ராடி
யருளே. (௫)

---

(௪) வான்படர்தலும் விரிந்தோடலும் புனையத் தும்பியோட
வென இயையும். ஏறிடல் - கோத்திடல்.

(௫) பிணிமுகம் - மயில்.

வேறு.

ஏந்து பிறைவெண் மருப்புரற்கா லெழில்கூர் மலை வா ரணத்திரள்கள் - எய்திப் பரவை கலக்குமலை யேய்ப்பத் துளைந்து விளையாடி,—நீந்தி யணைந்து கரையேறி நிறையுங் களிப்பு மீக்கொண்டு - நிலாவெ ண் டரளக் குவைபெயர்த்து நீள்வா ரிதியின் கரைக் கணலை,—மாந்து முகிலா லியைச்சொரிந்தான் மா னச் சிதறும் பரப்பினிடை - வான்மீ னடுவட் பல மதியம் வதிந்தா ணிகர்ப்பச் சங்கினங்கள்,—போந்து துயிலும் பாலிநதிப் புதுநீ ராடி யருளுகவே - பொற் பார் குளந்தை யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே.

வழியுஞ் செழுந்தேங் கமலமலர் மடவா ரமிழ்தே புனலகத்து - மறைந்தால் யாங்க ணினைப்பிடிக்க வல் லே மெனவஞ் சினங்கூறச்,—சுழியும் புனனீ யவ்வா று துண்ணென் றெளிப்ப மற்றவர்தாங் - துருவிக் காணு தெங்கொழுநர் சோதிப் பிரான்று டலையெ ன்ன,—மொழியு முறுப்போ ரிரண்டையுமே முன் னிக் காணார் யாமிவளை - முழுதுங் காணே மென நாணி முடிசாய்த் தொதுங்கி நிற்பவருள்,—பொழி யும் பசிய முகில்பாலிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குளந்தை யமுதவல்லி புதுநீராடி யரு ளுகவே. (எ)

திரையுந் தனது நறும்புனலிற் றிளைத்து முழுகு மடவார்தஞ் - செழுந்தேங் தொடையற் சுருப்பினங்

(எ) வஞ்சினம் - சபதம்.

கள மேசடமசன றகலும படிவிலக்கி,—உரையுந் தொ
ழிலு முள்ளமுந்தன் னுழைச்சேர்த் தழுந்து வோர்
மலநோய் - ஒருவுந் தொழிலைத் தெரித்திதழி யுறழப்
பொன்னும் வெண்டலைபோல், — நுரையுஞ் சடை
போற் றுவர்க்கொடியு நுணுகு மதிபோற் கரிக்கோ
டும் - நுடங்க நடித்து வெளுத்துமறை நுவலற் கரிய
பரம்பொருளைப், — புரையுஞ் செல்வப் பெரும்பா
லிப் புதுநீ ராடி யருளுகவே - பொற்பார் குளந்தை
யமுதவல்லி புதுநீ ராடி யருளுகவே. (அ)

வே று.

முகமல ரினையொளி யுகுமதி யாமென முண்டக
நொந்தயர - முன்கையி லேற்றிய சங்கொடு சங்க
முழங்கிக் கரைபுரள,—மகர விருங்குழை யெதிரிய
கெண்டை மலங்கு கயற்குலம்வார் - வாளை கலங்கி
யெழுந்து குதிப்ப வயங்கு சுணங்கிலமென்,—றக
நெகு புற்புத முலையி னுடைந்திற வறல்குழல் போ
ற்றகரம் - அணிந்தில மெனநின தடியிற் றன்கவி
னழியத் திருமருவிப்,— புகழ்நிறை யுங்கம லாகரி
யாலிப் புதுநீ ராடுகவே - பூரண ஞான புராதனி
பாலிப் புதுநீ ராடுகவே. (கூ)

விற்புரு வங்குழை யக்கரு நீல விழித்துணை செங்
குவளை - வெல்லநின் மேனி தழைப்பழு கேமென
வீங்கிய நீர்குடையா,—நிற்புகழ் தெய்வ மடந்தை

(அ) தெரிக்குப் பரையும் என இயையும்.

யர் மீதினி னிள்சிவி றித்துளையான் - கிளைத்த குறுந் துளி தம்முட லெங்கு நிரத்தலும் வானவர்தங்,— கற்புனை தோள்கள் புதைத்தன ராடக் கடவுள் சடா மகுடக் - கங்கை யவன்றலை யைந்தொடு மாடக் கா சினி கொண்டாடப்,—பொற்பு மிகுங்கம லாகரி புரா விப் புதுநீ ராடுகவே - பூரண ஞான புராதனி பாவிப் புதுநீ ராடுகவே. (௧0)

நீராடற்பருவ முற்றிற்று.

---

## ஊசற்பருவம்.

ஒழுகொளி பரப்பிக் கதிர்த்தெழும் பரிதியை யொழுக்கித் திரட்டியதுபோல் - உரகமுமிழ் செம் மணித் தூணிறுவி யதனும்ப ரொளிநிலாக் கான்ற கலைகள்,—முழுதுநிறை திங்களை யுருட்டி நீட்டிய தேய்ப்ப முதிர்வயிர விட்டமிட்டம் - முழுமதியி னின்றிழியு மமிழ்ததா ரைகளென்ன முத்தணி வட ங்கதேக்கிப், — பழுதகலு நவமணிப் பலகையிடை மூட்டியப் பலகைமேன் மதியமிழ்துணப் - பச்சிளங் கிள்ளையொன் றேறிஞ லென்னப் பரிந்திருந் தருளி மூலைமேற்,—புழுகொழுக வுயிர்களுக் கருளொழுகு மமுதம்மை பொன்னூச லாடியருளே - பூரண மதி க்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே.

---

(௧0) சிவறி - நீர்வீசுங் கருத்தி.

ஊசற்பருவம் - ஊசலாடும்பருவம்.

செயலையந் தாருவை யுதைந்தாடு தொறுமச் செ
ழுந்தருப் பூக்கள்சொரியுஞ் - செயலுறுதைக் காற்
ருது தனைநீங்க வெண்ணிநந் தேவைத் தணந்துவிளை
யாட்,—டியலைமேல் கொண்டநின் மீதலர்ப் பூம்பக
ழி யிளையாது சொரிவதெனவும் - இதுகண் டதற்கு
நேர் விழிச்சுரும் பீந்தருளி யிளநிலா நகைமுகிழ்
ப்ப,—அயலுறாஉங் கொடிமுல்லை யூழ்த்தலர் சொரி
ந்திட லருந்துணைமை பூண்டுதானும் - அலர்வாளி
பெய்திடுந் திறனெனவு மேர்காட்ட வைம்படை
பொறுத்தபச்சைப், — புயலொடு பிறந்தருட் கட
லொடு வளர்ந்தமின் பொன்னூச லாடியருளே -
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச
லாடியருளே. (உ)

---

(உ) மகளிரால் மலரும் மரங்களுள்ளே அசோகு உதைக்க மலர்வதும் முல்லை சிரிக்கமலர்வது மாகலின் இங்ஙனம் கூறினார். அசோகு அலர்சொரியுஞ்செயல் அம்பிகையைச் சிவபெருமான்பாற் சேர்க்கும்படி மன்மதபாணம் ஐந்தனுள் ஒன்றாய்த் தன்னிடத்துள்ள மலரைச் சொரிதலை நிகர்க்க; முல்லைசொரிதல் தானும் அதற்குத் துணைமைபூண்டு தன்னிடத்துள்ளதைச் சொரிதலை நிகர்த்ததென்பது. மரங்கள் மகளிரான் மலருமியல்பை "எண்மா தவிசண் பகம்பாலை புன்னைபுன் காலியெழில், கொண்மா மகிழ மராவோ டசோகு குராமுல்லையின் - பண்பாடனீழற் படனட்ட லாடல் பழித்தலுண்ணல் - கண்ணேக்குதை யணைத் தற்சிரித்தற்கலர்க் காடுறுமே" என்பதனு னறிக.
செயலை - அசோகு. பச்சைப்புயல் - திருமால்.

நிலம்பொலி யுயிர்ப்பயிர் மலக்கொடுந் தழல்வெம்மை நீத்துமெய்ஞ் ஞானமலரா - நின்மலா னந்தச் செழுங்கனி கனிந்தோங்க நிறையருட் சூல்கொண்டு பொற்,— கலம்பொலியு முருவெலாம் பச்சென்று தோற்றிக் கருங்குழற் கற்றைநாப்பட் - கதிர்த்தசிறு கீற்றினுன் மின்னியொளி கூர்நுதற் கார்முகங் கவினவாங்கிச்,—சிலம்பொலிசெய் கிண்கிணிப் பருமத்தினுற்பெருந் தீங்குர லெடுத்திடையருத் - திருவருட் டாரைபொழி செய்கைக்கு வாய்ப்பவான் சேர்ந்துலாய் நிற்றலுறழப்,—புலம்பொலியு மடியார்கள் சிந்தைகுடி கொண்டவள் பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௩)

மனக்குல மிடைந்துபின் காட்டவிசை கொண்டாடும் வன்மையா னினதுருவெலாம் - மணித்திர ணிரைத்தெனச் சிறுவெயர் பொடித்தலும் வழிநின்று பணிகேட்டுநின்,—னனக்கவி னடைத்திறங் கற்கவரும் வெள்யானை யஞ்சிச் செவிக்காலெறிந் - தந்தரக் கங்கையை மடுத்துத் துளித்துவெய ராற்றுமத்

(௩) கனிந்தோங்கப் பொழி எனவும், உறழ ஆடியருள் எனவும், இயையும். புலம் - ஞானம்.

(௪) நடைத்திறங்கற்கவந்த வெள்ளையானை வெயரை ஆற்றுந் திவலை இமையோர்முதல் தரு புல் இறுதியாக நிரத்தல், அனைத்து நின்மயம் என்னும் சொல்லை நிலைநிறுத்தலை ஒத்தது என்பது. திவலை பரவா ஏய்ப்பவென இயையும்.

திவலைபரவா,—நினக்கடிமை பூண்டுமுன் போற்றுமி மை யோர்முத னெடுந்தருப் புல்லிறுதியின் - நிரத் தலா லனைத்துநின் மயமெனுஞ் செஞ்சொல்லை நிலை யுறுத் திடுவதேய்ப்பப், — புனக்கிளி நிகர்த்தமென் றீங்கிளவி யமுதம்மை பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. (௪)

திங்களொளி காட்டுமுக மீதுலவு நாட்டச் செழுங் கய லுதைந்தூக்கலாற் - செம்பொனி னிழைத்தமக ரக்குழைக ளுஞ்செவிச் செங்கனக வூச்லாடப், — பங்கய விருக்கைமட மாதரது நோக்கிரு பாலு மிரு வேமாட்டவும் - பாயுங் கயற்குல மசைக்குமவ் வூசலிற் பாய்ந்திலதிவ் வூசலெனநீள்,—அங்கையின் வலித்துநனி யாட்டுதொறு நின்வா யரும்புநகை நிலவெழிலினுக் - காங்கவர் முகத்திங்கள் சாயப் புரா ணமறை யாகம மளந்தறிவரும்,—புங்கவன் மருங்கு குடி கொண்டவமு தாம்பிகை பொன்னூச லாடி யருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ பொன் னூச லாடியருளே. (௫)

திண்ணிய பொலஞ்சிகரி வாங்கிய பிரான்சென்னி தெரிகலா மறையோதிமஞ் - செப்புபழி மொழிமாறு மாறுனக் கூர்தியாய்ச் சேர்ந்துநின் றுள்சுமந்து,— தண்ணிய நிறைதுகண் ணருள்கிடைத் தூன்னுழிச் சார்ந்திறைவ னாடமீரக் - தாள்பணியு மேல்வை

வரலும்,—கண்ணியவவ் வஞ்சனை யறிந்ததனை யல மரக் காண்டுமென வுன்னியேறிக் - ககனத்து முன் பின்ன தாகக் கடாவுதல் கடுப்பவெண் டரளமொய் த்துப், — புண்ணிய மலர்ந்தனைய வொண்பலகை யேறிநீ பொன்னூச லாடியருளே - பூரண மதிக் கருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே. ()

அரவமுமிழ் செம்மணித் திரள்சுற் றிழைத்திடை யலங்கொளிய நித்திலத்தால்-அமைத்ததனடுச்செழு ஞ் செம்பட் டலங்கரித் தவிர்பலகை மீதிருத்தல்,— இரவகல வெங்கதி ருகும்பரிதி மண்டல மிளம் பனிக் கதிர்மண்டலம் - எரிக்கடவுண் மண்டலங் கீழ் தொட்டு முறைமூன்று மேய்ந்தபூந் தவிசிலடி யார், — பரவநீ நின்றநிலை யொப்பவா னந்தமெய்ப் பண்ணவன் விழிச்சுடர்கணின் - பாலனுகு காட்சி யப் பரிசறிந் தெம்மையும் பருஉமணித் தவிசெனக் கொள்,—புரவுபூண் டருளென்று வேண்டுதல் கடு ப்பவுயர் பொன்னூச லாடியருளே - பூரண மதிக்க ருள் புரிந்தகம லாகரீ பொன்னூச லாடியருளே.(எ)

சுத்தமு மசுத்தமு மெனப்படுங் கொடுமாயை தூணுக விருளாணவங் - தொடுத்தநெடு விட்டமாக் கருமப் பெரும்பகுதி தூக்கிய வடங்களாக,—வைத் தமா யேயமே பலகையா முடிவிலா வான்புவன கோடிமுற்றும் - மகிழ்ந்தாடு வெளியாக வாருயிர்க் குழவிகளை மரணம்பிறப்பென்னுநோய்,—மொய்த்த மணி யூசல்வைத் தாட்டிக் கடைத்தலை முடங்கா

தெடுத்தணைத்து - முதுக்குறை வளித்துமேற் பர
மூத்தி வீடுய்த்து மூவாத வானந்தமாம்,—புத்தமிழ்
தருத்திமெய்த் தாயாய் வளர்ப்பவள் பொன்னூச
லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. (அ)

நாந்தகப் பொருபடை விதிர்த்தனைய விமையாத
நாட்டத் தரம்பைமாரும்-நளினக் கரங்கூப்பி யெதிர்
நிற்கு முகில்வண்ண நாயகன் முதற்றேவரு,—வேய்ந்
தசெம் பொற்பெரும் பூண்களி னிழைத்தபல வேறு
குல மணிகடோறுமவ் - விரிகதிர்ப் பேதத்தி னுக்
கேற்ப நின்னூசன் மின்னிழல் பரப்புதோற்றம்,—
வாய்ந்தமெய்த் தொண்டுசெயு மன்பர்க ளுளந்தொ
றும் வயங்குபரி பாகபேத - மார்க்கத்தி னுக்கிசைய
மன்னிநீ விளையாடும் வாய்மையைக் காட்ட வளி
வீழ்,—பூந்தகர வார்கருங் கூந்தலமு தாம்பிகை
பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்த
கம லாகரீ பொன்னூச லாடியருளே. (௯)

அண்டப் பரப்பெங்கு மண்டிப் படர்ந்த பே ரா
னந்த வெள்ளம்வாழ - அருட்சரியை கிரியை சிவ
யோகமொடு ஞானமெனு மதிகசிவ தருமம்வாழக்,—
கண்டவர்க் கினியநஞ் சோமேசர் வாழநின் கட்க
டைக் கருணைவாழக் - காசினி யொருங்குசிவ பத்
திகுரு பத்திசங் கமபத்தி செய்துவாழ,—வெண்டி
ருப் பூதியுய ரக்கமணி வாழமெய் விளக்குமஞ் செ

தைநகர் மேன்மேற் செழித்துவாழ்கி, — புண்டர நுதற்றொண்டர் தங்குழாம் வாழநீ பொன்னூச லாடியருளே - பூரண மதிக்கருள் புரிந்தகமலாகரீ பொன்னூச லாடியருளே. (௧0)

ஊசற்பருவ முற்றிற்று.

---

குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

சிவஞானசுவாமிகள் திருவடிவாழ்க.

---

சிவஞானசுவாமிகள் திருநக்ஷத்திரம்.

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம் - பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிருமேனி நீங்கு தினம்.

மகாமகோபாத்யாய டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
சென்னை-20.

